முதற் பதிப்பு: மே, 1956.
இரண்டாம் பதிப்பு: மே, 1961.
மூன்றும் பதிப்பு: ஜனவரி, 1967.


விலை ரூ. 1-75

**சுதந்திர நிலைய வெளியீடு—18.**



மாருதி பிரஸ், 83, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14.

சமர்ப்பணம்

டாக்டர் ல. கி. முத்துசாமிக்கு

# நாடகத்தில் தோன்றுவோர்

கரிகாற்பெருவளத்தான்
ஆட்டனத்தி
ஆதிமந்தி
வேண்மாள்
மருதி
பொன்னி
சாத்தன்
மாரன்
சேனாபதி
அமைச்சர்
சேவகன், தோழிகள், பெண்கள்,
பொதுமக்கள் முதலியோர்.

இந்த நாடகத்திலுள்ள நிகழ்ச்சிகள் உறையூர், சேர நாட்டுச் சோலை, கழார் நகரம், காவிரிப்பூம் பட்டினம், கழாருக்கும் காவிரிப்பூம்பட்டினத்துக்கும் இடையிலுள்ள காவிரி நதிக்கரை முதலிய இடங்களில் நடை பெறுகின்றன. காலம் கி. பி. முதல் நூற்றாண்டெனக் கொள்ளலாம்.

# முன்னுரை

காதலுக்காக அனைத்தையும் தியாகம் செய்தவர்கள் பலர் உலகத்திலே வெவ்வேறு நாடுகளில் தோன்றியிருக்கிறார்கள்.

காதல், காதல், காதல்;
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்

என்ற உறுதியோடு நின்ற அந்த அமரக் காதலர்களின் சரிதம் வெவ்வேறு மொழிகளில் உயர்ந்த இலக்கியங்கள் தோன்றக் காரணமாக இருந்திருக்கின்றன. மக்களின் உள்ளத்தை அந்த இலக்கியங்கள் என்றும் கவர்கின்றன. அந்தக் காதலர்களை உலகம் ஒருநாளும் மறப்பதில்லை.

அப்படிப்பட்ட காதலர்களின் வரிசையிலே சேர்ந்தவள் ஆதிமந்தி. அகநானூற்றிலும் சிலப்பதிகாரத்திலும் அவளுடைய காதலின் பெருமை கூறப்பட்டுள்ளது. ஆற்று வெள்ளம் காதற் கணவனை அடித்துச் சென்ற பின்னர் ஆதிமந்தி கதறி யழுததைக் கண்டு கல்லும் புல்லும் உருகின. அதனாலேயே 'ஆதிமந்தி அரற்றினாற்போல' என்று கூறுகின்ற வழக்கம் எழுந்தது.

புகார் எனப்படும் காவிரிப்பூம்பட்டினத்துக் கற்புடைமகளிர் எழுவருள் ஆதிமந்தி ஒருத்தி. இவள் நல்லிசைப் புலமை வாய்ந்தவள். கரிகாற் பெருவளத்தான் என்ற புகழ் மிக்க சோழ அரசனின் மகள்,

காவிரிக்குக் கரையமைத்துச் சோழ நாட்டின் வளத்தைப் பெருக்கியவன் கரிகாலன். அதனாலேயே அவனுக்குப் பெருவளத்தான் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

கரிகாலன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான். காவிரிப்பூம்பட்டினமும் அவனுக்கு மற்றொரு தலைநகராக அமைந்தது. கரிகாலன் வரலாறே உள்ளத்தைக் கவரக்கூடியது. அவன் சிறு குழந்தையாக இருக்கின்றபோதே அவனுடைய தந்தை இளஞ்சேட்சென்னி காலமானான். கரிகாலன் பட்டமெய்தா வண்ணம் தடுப்பதற்கே பல சூழ்ச்சிகள் நடந்தன. அவற்றையெல்லாம் களைந்து அவன் பட்டத்திற்கு வந்ததோடு நாட்டையும் திறம்பட ஆட்சி புரிந்தான்.

அவனுடைய இளமையை எண்ணி வேளிர் தலைவர்களும், பாண்டியனும், சேரனும் சேர்ந்து கொண்டு அவனை எதிர்த்தனர். வெண்ணி என்னுமிடத்தில் அவர்களையெல்லாம் கரிகாலன் புறங் கண்டதோடு அமையாமல், பிறகு பல அரசர்களையும் எதிர்த்து வெற்றிகொண்டான். அத்துடன் இமயம் வரையில் படையெடுத்துச் சென்று பல அரசர்களை வென்றான். அவனுடைய வீரத்திற்கும் வலிமைக்கும் பணிந்த அரசர்கள் பலர் தந்த பொருள்களையும் பெற்றுச் சோழ நாட்டிற்குத் திரும்பினான்.

பெருஞ்சேரலாதன் என்ற சேரன் வெண்ணிப் போரிலே தோல்வியுற்றதோடு புறப்புண் பெற்றமையால் நாணம் கொண்டு வடக்கிருந்து உயிர் துறந்தான். கழாத்தலையார், மாமூலனார் என்னும் புலவர்கள் அவனைப் பாராட்டிப் பாடியுள்ளார்கள். கரிகாற்பெருவளத்தானைப் பாடவந்த வெண்ணிக் குயத்தியார் என்ற பெண்பாற் புலவரும், வெண்ணிப் போரில் பெரு வெற்றிபெற்றுப் புகழ் எய்திய

கரிகாலனைவிட அப்போரிலே பெற்ற புறப்புண்ணிற்கு நாணி வடக்கிருந்த பெருஞ் சேரலாதன் 'நின்னினும் நல்லனன்றே' என்று நயம்படப் பாடிப் பாராட்டியிருக்கிறார்.

கரிகாற் பெருவளத்தானைக் கருங்குழலாதனாரும் வெண்ணிக் குயத்தியாரும் பாடியிருக்கிறார்கள். மேலும் பொருநராற்றுப்படை, பட்டினப் பாலை என்ற நூல்களுக்கும் தலைவன் அவனே. அவனைப் பற்றிய குறிப்புக்கள் சிலப்பதிகாரம், கலிங்கத்துப் பரணி முதலிய நூல்களில் காணப்படுகின்றன. அவனுக்கு ஒருத்திக்கு மேற்பட்ட மனைவியர் உண்டென்று கூறுவார்கள். ஆனால், அவர்கள் பெயர் தெரியவில்லை.

ஆதிமந்தியின் வரலாறு பல ஆண்டுகளுக்கு முன்பே என் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. நாடகப் பண்பு மிகுந்தது அது. மேடையில் நடிப்பதற்கும், திரைப்படமாகப் பிடிப்பதற்கும் ஏற்ற சிறந்த அம்சங்கள் பெற்றது. அதை அடிப்படையாக வைத்து முன்பு நான் எழுதிய நாடகத்தை ஒலிபரப்பியபோது அதைப் பலரும் பாராட்டினார்கள். அவ்வாறு ஒலிபரப்பிய நாடகத்தைப் பலவகைகளிலும் மாற்றி விரிவுபடுத்தி இங்குப் புதிதாக எழுதியிருக்கிறேன். பாத்திரங்களின் பண்புகள் முன்னிலும் தெளிவு பெற்றுள்ளன. கரிகாற் பெருவளத்தானுடைய பெருமையோடு போட்டியிடத் தக்க பெருமை வாய்ந்தவனாக பெருஞ்சேரலாதன் வெண்ணிக் குயத்தியாருக்குத் தோன்றுகிறான் அல்லவா? அதேபோல ஆதிமந்தியுடன் போட்டியிடத் தகுதி வாய்ந்தவளாக மருதி இந்நாடகத்தில் தோன்றுவதை அனைவரும் உணருவார்களென்று நம்புகிறேன்.

சென்னை,<br>15-5-56,

—பெ. தூரன்.

## மூன்றாம் பதிப்பின் முகவுரை

இந்நாடகத்தை நன்கு சுவைத்துப் பலபேர் பாராட்டியுள்ளனர். இம் மூன்றாம் பதிப்பும் அதற்கு ஒரு சான்று என்பதைத் தெரிவித்துக் கொண்டு அன்பர்களுக்கு நன்றி தெரிவிக்கவே இம் முகவுரையை எழுத முன் வந்தேன். வணக்கம்.

தைத் திருநாள்,<br>1967.

—பெ. தூரன்.

# ஆதி அத்தி

## முதல் அங்கம்

### காட்சி ஒன்று

[சோழ அரசர்களின் தலைநகராகிய உறையூரிலே ஒரு நாள் காலை நேரம். மணி பத்திருக்கலாம். சோழன் கரிகாற் பெருவளத்தான் அரசவையில் தனது அமைச்சர் சேனுபதி ஆகிய இருவருடன் சகஜமாகப் பேசிக்கொண்டிருக்கிருன். கரிகாலனுக்கு ஐம்பது வயதிருக்கலாம். பல போர்களில் வெற்றி பெற்றதினுல் ஏற்பட்ட கண்ணியமும், கலைப்பண்பால் ஏற்பட்ட அமைதியும் அவனிடத்தே நன்கு தோன்றுகின்றன. அமைச்சரும் சேனுபதியும் அவனுக்கு வயதில் சற்று மூத்தே தோன்றுகின்றனர்.]

சேனுபதி (எழுந்து நின்று அரசனைப் பார்த்து): கரிகாற் பெருவளத்து வேந்தரே, தாங்கள் நேற்று அனுப்பிய ஆணையொன்றின் பொருள் எனக்கு விளங்கவில்லை. அதைத் அறிந்துகொள்ள நான் பெரிதும் ஆசைப்படுகிறேன்.

கரிகாலன்: எதைப்பற்றிக் கேட்கிறீர்கள், சேனுபதி?

சேனுபதி: தாங்கள் தமிழ்நாட்டு முடியுடை வேந்தர்களான பாண்டியனையும், சேரனையும் அவர்களோடு சேர்த்து வேளிர் தலைவர்களையும் வென்றதோடு

அமையாது இமய மலை வரையிலும் படையெடுத்துச் சென்று வழியிலே எதிர்த்த அரசர்களையெல்லாம் வென்று இமயத்தில் நமது புலிக் கொடியைப் பொறித்து வந்தீர்கள்.

கரிகாலன் : ஆமாம். அது பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவமல்லவா? இப்பொழுது அதைப் பற்றியென்ன?

சேனாபதி : வடநாட்டுப் படையெடுப்பின் போது தங்கள் போர் வலிமைக்குப் பணிந்து வச்சிர நாட்டரசன் கொடுத்த முத்துப் பந்தரும், மகத நாட்டரசன் தந்த பட்டி மண்டபமும், அவந்தி வேந்தன் தந்த தோரண வாயிலும் இதுவரை நமது அத்தாணி மண்டபத்தில் அனைவரும் காணுமாறு வைக்கப்பட்டிருந்தன. அவற்றை யெல்லாம் கலைக் கூடத்திலே ஓர் ஒதுக்கிடத்தில் வைக்கும்படியாகத் தாங்கள் இப்பொழுது ஆணையிட்டிருக்கிறீர்கள். அதன் கருத்தை எனக்குத் தெரிவிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன்.

கரிகாலன் : சேனாபதி, இது விஷயமாக எனது உள்ளக் கருத்தை அமைச்சரிடம் தெரிவித்துக் கொண்டிருந்தேன், அவர் உங்களுக்குக் கூறவில்லையா?

[கரிகாலன் அமைச்சரைக் குறிப்பாகத் திரும்பிப் பார்க்கிறான். சேனாபதி தமது ஆசனத்தில் அமர்கிறார்.]

அமைச்சர் : போரினால் பெற்ற வெற்றிச் சின்னங்களை வேந்தர் இப்பொழுது அவ்வளவு பெரிதாகக் கருதுவதில்லை. அவருடைய உள்ளம் இப்பொழுது சோழ நாட்டை வளப்படுத்துவதிலும் குடிகளின் இன்பத்தைப் பெருக்குவதிலும் அதிகமாக ஈடுபட்டிருக்கிறது.

கரிகாலன் : அமைச்சர் கூறுவது மெய்தான. ஆனால் அதன் காரணமாக நமது போர் வீரர்களும், சேனாபதியாகிய நீங்களும் காட்டிய போர்த் திறமையை

நான் மறந்து விட்டதாக எண்ணிவிடாதீர்கள். சேனுபதி, உங்களுடைய வீரத் தலைமையே எனக்கு வெண்ணியிலும் பிற போர்க்களங்களிலும் சிறந்த வெற்றியைத் தந்தது. அதற்காக நான் என்றும் உங்களுக்கு நன்றியுடையவனுக இருப்பேன்.

சேனுபதி : வேந்தே, தங்களுடைய அன்பான வார்த்தைகள் எனக்கு மகிழ்ச்சி யளிக்கின்றன. போர்க்களத்திலே நான் காட்டிய திறமையைவிடத் தங்களுடைய வீர சாகசமே வெற்றிக்கெல்லாம் காரணம் என்பதை நான் அறியாமலில்லை. இருப்பினும் தங்களுக்குத் துணையாக இருக்கும் வாய்ப்புக் கிடைத்தமைக்காக நான் பெருமையடைகிறன்.

அமைச்சர் : போரிலே சிறந்த வெற்றிகள் பெற்றதோடு நாட்டை வளப்படுத்துவதிலும் நமது வேந்தர் சிறந்த வெற்றி பெற்றிருக்கிருர். காவிரிக்குக் கரையமைத்து இந்த நாட்டைச் செந்நெற் களஞ்சியமாகச் செய்தவரும் அவர்தானே?

சேனுபதி : அரசே, தங்களை மக்கள் கரிகாற் பெருவளத்தான் என்றே கூறித் தாங்கள் இந்த நாட்டின் வளத்தைப் பெருக்கியதைப் பாராட்டுகிருர்கள்.

கரிகாலன் : நாட்டின் செழிப்பு மிகுந்ததையும் அதற்குக் காரணமாக அமைந்த காவிரியாற்றின் பெருக்கையும் கொண்டாடிப் புதுப்புனல் நீராட்டு விழா ஏற்பாடு செய்திருக்கிருேமல்லவா? அந்த விழாவிலே மக்கள் மிகுந்த உற்சாகங் காட்டுவதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். இதை நமது நாட்டின் முக்கியமான விழாக்களில் ஒன்ருகச் செய்துவிட வேண்டும் என்பது என்னுடைய விருப்பம்.

அமைச்சர் : நமது சோழ நாட்டின் வளத்திற்கெல்லாம் காவிரித் தாய்தான் முக்கிய காரணமாக இருக்

கிருள். ஆதலால் காவிரியிலே புதுவெள்ளம் 'பெருகு கின்ற ஆடி மாதத்திலே புனலாட்டு விழாவை மக்கள் உற்சாகமாகக் கொண்டாடுவதிலும் நல்ல பொருத்த மான காரணம் இருக்கின்றது. மேலும் சோழ வேந்த ராகிய தாங்களே இந்த விழாவிலே உற்சாகங் காட்டு வதும் காவிரியின் கரையிலே மக்களோடு தங்கி அங்கு நடக்கும் கேளிக்கைகளிலே கலந்து கொள்வதும் மக்க ளுக்கு இன்னும் அதிகமாக உற்சாகத்தைக் கொடுத் திருக்கின்றன.

சேனுபதி : வேந்தே, தாங்கள் மட்டுமின்றி அரசி யாரும் இளவரசி ஆதிமந்தியும் ஆடிப் புதுநீர் விழாவில் ஆர்வத்தோடு கலந்து கொள்வது எல்லோருக்கும் மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கின்றது. இளவரசி ஆதி மந்தி சென்ற முறை விழாப் பந்தலில் ஆடிய நடனத் தைப் பற்றிப் புகழ்ச்சியாக இன்னும் மக்கள் பேசிக் கொண்டிருக்கிருர்கள்.

கரிகாலன் : சேனுபதி, அன்று நடந்த நாட்டியத் திற்கு விழாப்பந்தலிலே நீங்கள் செய்திருந்த ஒழுங்கு ஏற்பாடுகள் மிகவும் பாராட்டுதற்குரியன.

சேனுபதி : நம் நாட்டிலே இப்பொழுது போரே ஒழிந்துவிட்டது; பகைவர் என்று எதிர்த்து வரக்கூடி யவர் யாருமில்லை. பெரிய விழாக் காலங்களிலாவது நமது வீரர்கள் தாங்கள் பெற்ற பயிற்சியையும் கட்டுப் பாட்டையும் காட்ட வேண்டாமா?

அமைச்சர் : புதுப் புனலாட்டு விழா அதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் அளிக்கிறது. அந்த விழாவிலே நமது படை வீரர்களின் திறமையை அறிந்து கொண்டதோடு குடிமக்களின் மனப் போக்கையும் அறிந்து கொள்ள முடிந்தது.

கரிகாலன் : அமைச்சரே, நீங்கள் கூறுவது மெய் தான். குடிகளோடு இப்படிப்பட்ட விழாக்காலங்களில் கலந்து பழகுவதால் அவர்களுடைய இன்பதுன்பங்களை அறிந்து கொள்ள நல்ல வாய்ப்பு ஏற்படுகிறது. அவர் கள் நமது ஆட்சியைப்பற்றி என்ன நினைக்கிறார்களென் பதையும் தெரிந்து கொள்ளவும் முடிகிறது. ஆதலால் இந்த விழாவை இந்த ஆண்டு இன்னும் சிறந்த முறை யில் கொண்டாடுவதற்கு இப்பொழுதிருந்தே ஏற்பாடு களைத் தொடங்க வேண்டும்.

அமைச்சர் : வேந்தே, புதுப்புனல் விழாவிற்கு இன்னும் ஐந்து மாதங்களிருக்கின்றன. ஆனால் இப் பொழுதே இசையரங்குகள் முதலியன அமைக்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

கரிகாலன் : வெவ்வேறு வகையான பண்டங்களை விற்பதற்குத் தனித்தனி அங்காடிப்பகுதிகளை ஏற்படுத்து வதோடு முக்கியமாகக் கலைஞர்கள் தங்கள் கலைப்பொருள் களைப் பிறருக்குக் காட்டவும் விற்கவும் நல்ல வசதிகள் செய்ய வேண்டும்; பலவகையான கலைநிகழ்ச்சிகள் நடக் கவும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

அமைச்சர் : இந்த விழா கலை விழாவாகவே அமைய வேண்டுமென்று தாங்கள் விரும்புவதை மக்க ளும் அறிந்திருக்கிறார்கள்.

கரிகாலன் : ஆம், கலையை வளர்ப்பதற்கு இதுவும் ஒரு சந்தர்ப்பமாக அமைய வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். அதனாலேயே எனது மகள் ஆதிமந்தி யையும் இவ்விழாவிலே நாட்டியம் ஆடும்படி ஏற்பாடு செய்தேன்.

சேனாபதி : சோழவேந்தர்கள் கலையைப் பெரிதும் ஆதரிப்பவர்கள் என்பதை நம் நாட்டில் மட்டுமல்லாமல்

பிற நாடுகளிலும் அறிந்து கொண்டிருக்கிறார்கள். இது சோழ மரபிற்கே பெருமை தந்திருக்கிறது.

[சேவகன் ஒருவன் முன்வந்து வணங்குகிறான்.]

கரிகாலன் (சேவகனைப் பார்த்து) : சேவகா, என்ன செய்தி?

சேவகன் : சோழ வேந்தே. தங்கள் தரிசனத்திற்காக நாட்டியக்காரர் ஒருவர் சமயம் பார்த்து நிற்கிறார்.

கரிகாலன் : நாட்டியக்காரரா?

சேவகன் : ஆம், அரசே—அவர் தம்முடைய பெயர் அத்தி என்று தெரிவித்தார். சேர நாட்டிலிருந்து வந்திருக்கிறாராம்.

கரிகாலன் : அப்படியா? அவரை இங்கே வரும்படி சொல். (அமைச்சர் பக்கம் திரும்பிப் பார்த்து) அமைச்சரே, நீங்கள் இந்த நாட்டியக்காரரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

அமைச்சர் : நான் கேள்விப்பட்டதில்லை; இப்பொழுதுதான் அவர் முதல் முறையாக நம் நாட்டுக்கு வருகிறார் போலிருக்கிறது.

[அத்தி எதிரில் வந்து நின்று வணங்குகிறான். உடல் வனப்பும் மிடுக்கான தோற்றமும் உடைய இளைஞன் அவன்.]

அத்தி : கரிகாற் பெருவளத்து வேந்தே, எனது வணக்கம். நான் சேர நாட்டைச் சேர்ந்தவன்; அத்தி என்பது என் பெயர். நாட்டியக் கலையை ஆர்வத்தோடு தாங்கள் போற்றி வளர்ப்பதை அறிந்து தங்களைக் காண நான் வந்திருக்கிறேன்.

கரிகாலன் : கலைஞர்கள் எந்த நாட்டிலிருந்து வந்தாலும் அவர்களை ஏற்றுப் பாராட்டுவது இந்த நாட்டி

ஞோர் மரபு. அந்த மரபின்படியே உங்கள் வரவைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். நீங்கள் நாட்டியம் யாரிடம் பயின்றீர்கள்?

அத்தி : வேந்தே, நான் இந்த் நாட்டிற்கு வந்து பல ஆண்டுகள் இருந்துதான் நாட்டியம் பயின்றேன். சோழநாடு பரத நாட்டியத்திற்கும் கலைகளுக்கும் தாயகம் போன்றது என்பது அனைவருக்கும் தெரிந்த உண்மை. தங்களுடைய ஆதரவாலும் ஆர்வத்தாலும் கலைகளெல்லாம் இங்கே ஓங்கி வளர்வதை அறிந்து என்னைப் போன்ற கலைஞர்கள் பெரிதும் மகிழ்ச்சியடைந் திருக்கிறார்கள். தங்களை நாங்கள் நாள்தோறும் பாராட் டிப் போற்றிக்கொண்டிருக்கிறோம்.

கரிகாலன் : சோழ நாட்டுக் கலைக்கு உங்கள் நாட்டிலும் பெருமை ஏற்பட்டிருப்பதை அறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இப்பொழுது நீங்கள் இங்கு வந்த அலுவல் யாது?

அத்தி : வேந்தே, உண்மையான கலைத் திறமை இருக்கிறதென்றால் அதை நன்கு சுவைக்கத் தெரிந்தவர் களுக்குக் காண்பித்து அவர்களுடைய நன் மதிப்பைப் பெறவேண்டும். அப்பொழுதுதான் அந்தக் கலை சிறப் பெய்துகிறது எனது நாட்டியக்கலை தங்கள் முன்னிலை யிலே பாராட்டுப் பெற முடியுமானால் அதைவிட எனக்குப் பெரிய பேறு வேறொன்றும் இல்லை. நாட்டி யத்தின் நுட்பமெல்லாம் அறிந்த தங்கள் சபையிலே நான் ஆடுவதற்கு ஆவலோடு வந்திருக்கிறேன். தங்க ளுடைய அன்பான அனுமதிக்குக் காத்திருக்கிறேன்.

கரிகாலன் : அப்படியா? மிகவும் மகிழச்சி— (அமைச்சரை நோக்கி) அமைச்சரே, இவருடைய நடனத்தைப் பார்ப்பதற்கு நமது கலையரங்கில் நாளை

மாலையே ஏற்பாடு செய்யுங்கள். பெருங்குடி மக்களுக்கும் பிரதானிகளுக்கும் அழைப்பு அனுப்புங்கள்.

அமைச்சர்: அவ்வாறே ஏற்பாடு செய்கிறேன்.

அத்தி : வேந்தே, எனக்கு இந்த அரிய வாய்ப்பை அளித்ததற்காகத் தங்களைப் போற்றுகிறேன். என்னை யாரென்று தெரியாமலே தாங்கள் இந்த வாய்ப்பை அளித்தது தங்களுக்கு நாட்டியக் கலையிலுள்ள ஆர்வத்தையே காட்டுகின்றது. தாங்கள் மட்டுமல்லாமல் அரண்மனையிலுள்ள அனைவருமே இக்கலையில் ஈடுபாடுடையவர்கள் என்பதை நான் அறிவேன். சென்ற புதுப்புனல் விழாவின்போது தங்களுடைய அருமை மகள் நாட்டியமாடியதைக் கண்டு களிக்கும் பெருவாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அற்புதமான கலைத்திறமை வாய்ந்த அவர்களும் எனது நாட்டியத்தைக் காண வரவேண்டும் என்பது என்னுடைய பணிவான வேண்டுகோள்.

[பணிந்து நிற்கிறான்.]

கரிகாலன் : அரண்மனையிலுள்ளோர் அனைவரும் வருவார்கள். சேர நாட்டுக் கலைஞர் ஒருவருடைய கலைத் திறமையைக் காண அவர்களுக்கும் மகிழ்ச்சியாக இருக்கும்.

அத்தி : சோழ வேந்தே, எனது வேண்டுகோளுக்கு இணங்கியதற்காக நான் தங்களுக்கு என்றும் கடமைப் பட்டிருக்கிறேன்.

[வணக்கம் செலுத்துகிறான்.]

கரிகாலன் : அமைச்சரே, இந்தக் கலைஞருக்கு வேண்டிய வசதிகள் ஏற்பாடு செய்யுங்கள். நாளைச் சந்திப்போம்.

[கரிகாலன் ஆசனத்தைவிட்டு எழுந்திருக்கிறான். மற்றவர்களும் எழுந்திருக்கிறார்கள். கரிகாலன்

ஒரு புறமாகச் செல்லுகிறான். அத்தி மீண்டும் வணங்கி விடைபெற்றுச் செல்லுகிறான், சேனாபதியும் அமைச்சரும் அவனைப் பார்த்துக் கொண்டே பின் தங்குகின்றார்கள்.]

சேனாபதி : சேர நாட்டிலிருந்து வந்திருக்கிற இந்த நாட்டியக் கலைஞரைப்பற்றி விவரம் ஒன்றும் தெரிந்துகொள்ளாமலேயே அவருடைய நாட்டியத்தைக் காண அரசர் இசைந்துவிட்டாரே?

அமைச்சர் : ஏன், சேர நாடு என்றவுடனேயே தங்களுக்குப் பழைய நினைவுகளெல்லாம் வருகின்றனவா?

சேனாபதி : அந்தக் காலம் மலையேறிவிட்டது. சேரலாதன் அந்தக் காலத்திலே நமது பகைவர்களோடு சேர்ந்துகொண்டதால் அவருக்குத்தான் சிறுமை ஏற்பட்டது. அதன் காரணமாகவே அவரும் உயிர் துறந்தார். இப்பொழுது நமது வேந்தரை எதிர்த்து வருபவரோ அவருக்கு எதிராகச் சூழ்ச்சி செய்பவரோ யாரும் இல்லை. இருந்தாலும் நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டுமல்லவா?

அமைச்சர் : இந்த நாட்டியக் கலைஞர் அத்தியின் மிடுக்கான தோற்றத்தைப் பார்த்தால் அவர் சாதாரண நாட்டியக்காரராக எனக்குத் தோன்றவில்லை. தங்களுடைய வீரர்கள் கலையரங்கில் ஒழுங்கு முறையைக் கவனித்துக்கொள்ள நாளை வருவார்களல்லவா?

சேனாபதி : அந்த ஏற்பாட்டை நான் செய்து விடுகிறேன்.

அமைச்சர் : நாளை மாலை நேரத்திற்குள் நானும் அத்தியைப்பற்றி விவரம் அறிய முயல்கிறேன். பிறகு பார்த்துக்கொள்வோம். கலை எங்கிருந்து வந்தாலும் அதை ஆதரிக்க அரசர் ஆர்வங்காட்டுவதுபோல் நாமும்

எந்த வேளையிலும் நமது கடமையைச் செய்ய ஆர்வத்தோடிருப்போம்.

[செல்லுகிறார்கள்.]

திரை

## காட்சி இரண்டு

[மாலை நேரம். கரிகாலனுடைய அரண்மனையைச் சேர்ந்த கலையரங்கு அழகாகவும் பொருத்தமாகவும் அணி செய்யப்பட்டு விளங்குகின்றது. மந்திரி சேனபதி முதலியவர்களும் பிரமுகர்களும் உரிய ஆசனங்களில் அமர்ந்திருக்கிறார்கள். சோழன் கரிகாற் பெருவளத்தான், அரசி வேண்மாள், இளவரசி ஆதிமந்தி ஆகியோர் தனிப்பட முன்னால் தமக்குரிய ஆசனங்களில் இருக்கிறார்கள். அத்தி அற்புதமாக நடனமாடிக்கொண்டிருக்கிறன். அந்த நடனத்திலீடுபட்டு அனைவரும் மெய்மறந்திருக்கிறார்கள். தங்கத்தில் வார்த்தெடுத்த பதுமைபோல் அசைவற்று ஆதிமந்தி நடனத்தில் ஆழ்ந்திருக்கிறள். நடனத்திற்கான பின்னணிப் பாட்டுக் கேட்கிறது:]

(பாட்டு)

பல்லவி

ஆநந்த நடனமாடினர்—அம்பலந்தனில் ஒரு
காலைத் தூக்கி அழகாகவே— (ஆநந்த)

அனுபல்லவி

வானந்தனைக் கடந்த பரவெளியில்
வளர் ஜோதியாய் நின்ற பெருமான்
தானந்தமில்லாத விளையாடல் செய்தே
சகல லோகமு மாக்கியோர்— (ஆநந்த)

சரணம்

ஓர் கரத்தே டமருகம் தோற்றம் காட்டிட
ஓங்கனல் மறு கரத்தே அழிவு கூட்டிட
உவந்தே நாரணன் மத்தளம் போட
ஒய்யாரமாய் அயனுரது தாளம் கூட
ஆர்ப்பரித்தே அடங்கியே அன்னை சிவகாமியும்
அடியார் முனிவோர் பரவசமாகவே
அண்டமெலாம் அதிர்ந்து கிடுகிடுங்க
ஆதி சேஷனும் உடல் நெளிந்து நடு நடுங்க
(ஆநந்த)

கரிகாலன் : ஆஹா! எவ்வளவு உயர்ந்த நடனம்! தில்லையில் ஆடுகின்ற பெருமானின் திருநடனத்தின் பெருமையை விளக்குவதற்குச் சேரநாட்டு அத்தியின் ஆட்டத்தைப்போல வேறொன்றுமிருக்க முடியாது.

வேண்மாள் : இவர் ஆட்டத்திற்கே பிறந்தவர். இப்படிப்பட்ட நடனத்தை நான் கண்டதில்லை.

கரிகாலன் : நீ சொல்வது முற்றிலும் சரி, இவர் ஆட்டத்திற்கே பிறந்தவர்தான். ஆதலால் இவருக்கு ஆட்டன் அத்தி என்ற சிறப்புப் பட்டத்தை நான் அளிக்க விரும்புகிறேன்.

[அப் பாட்டிற்கு நடனம் முடிகிறது. எல்லோரும் கை தட்டுகிறார்கள்.]

கரிகாலன் : அத்தியே, உங்களுடைய சிறந்த நடனத்தைக் காணும் வாய்ப்பைப் பெற்ற நாங்கள் உண்மையில் பாக்கியம் செய்தவர்களானோம். நடனக் கலையே உங்களால் ஒரு தனிமதிப்பைப் பெற்றுவிட்டது.

அத்தி (மகிழ்ச்சியோடு) : சோழவேந்தே, தங்களுக்குத் திருப்தி ஏற்பட்டிருப்பதை அறிந்து நான் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். இன்றுதான் என் கலை முயற்சி பூரணமடைந்தது.

[ஆதிமந்தி அத்தியையே உற்று நோக்கி மெய்மறந்திருப்பதையும் அத்தி அவளை அன்போடு பார்ப்பதையும் கரிகாலனும் வேண்மாளும் கவனிக்கிறார்கள். பிறகு கரிகாலன் அத்தியைப் பார்த்துப் பேசுகிறான்.]

கரிகாலன் : நீங்கள் ஆட்டத்திற்கே பிறந்தவர்கள் என்று சற்று முன்புதான் அரசி வேண்மாள் என்னிடம் கூறிக்கொண்டிருந்தாள். அவள் கூறியது முற்றிலும் பொருத்தம் என்று நான் முழுமனதுடன் ஆமோதித்தேன். ஆட்டத்திற்கே பிறந்த உங்களுக்கு ஆட்டன் என்ற சிறப்புப் பெயரையும் இந்தச் சபையோர் முன்னிலையில் அளிக்க விரும்புகிறேன்.

[சபையோர் அரசன் கூறியதை மகிழ்ச்சியோடு ஆமோதித்து உற்சாகமாகக் கைதட்டுகிறார்கள். அத்தி பூரிப்போடு தலை வணங்கி அதை ஏற்றுக் கொள்கிறான்.]

அத்தி : வேந்தே, இன்று எனது ஆவல் நிறைவேறியது. தங்களிடம் நன்மதிப்பைப் பெறுவதைவிட உயர்ந்த பாக்கியம் வேறென்ன இருக்கிறது? இதற்கு நான் பெரிதும் நன்றியுடையவனாக இருக்கிறேன். தாங்கள் விரும்பியளித்த சிறப்புப் பெயர் எனக்கு எல்லையில்லாத இன்பத்தைக் கொடுக்கிறது.

[இந்தச் சமயத்தில் அமைச்சரிடம் யாரோ ஒருவர் வந்து காதோடு பேசுகிறார்.]

அமைச்சர் (எழுந்து நின்று) : சோழ வேந்தே, இந்தச் சமயத்தில் நான் முக்கியமான ஒரு உண்மையைத் தங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இந்த நாட்டியக் கலைஞர் அத்தி யாரென்று அறிந்துகொள்வதற்காகச் செய்த முயற்சி இப்பொழுதுதான் வெற்றி

யடைந்தது. இவர் சாதாரண மனிதர் அல்ல; இவரே தான் சேரநாட்டு இளவரசர் அத்தி.

கரிகாலன் (ஆச்சரியமும் மகிழ்ச்சியும் பொங்க) : அப்படியா! எனக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி சேர இளவரசே, நீங்கள் ஏன் இதை முன்பே எனக்குத் தெரிவிக்கவில்லை.

அத்தி : கலைஞன் என்ற முறையிலேயே அரசவையில் உரிய பாராட்டுப் பெறவேண்டும் என்று எண்ணி வந்தேன். இளவரசன் என்பதற்காக எனது கலைக்குப் பாராட்டுப் பெற நான் விரும்பவில்லை. தாங்களும் அவ்வாறு பாராட்ட மாட்டீர்கள் என்பதை நான் அறிவேன்.

கரிகாலன் : உங்களுடைய நோக்கத்தை நான் போற்றுகிறேன். கலைக்குக் கிடைக்கும் மரியாதை அக் கலையின் சிறப்பைப் பொறுத்ததாகவே இருக்கவேண்டும் மற்ற உயர்வுகளைக் கொண்டு அதை மதிப்பிடலாகாது

அத்தி : சோழ வேந்தே, நான் சேரனாட்டு இளவசரனென்று தெரிவித்துக்கொள்ளாததற்கு முக்கியமான வேறு காரணமும் உண்டு. இதற்குள்ளாகத் தாங்களும் ஒருவாறு அதை யூகித்துக்கொண்டிருப்பீர்கள். அந்தக் காலத்திலே தங்களுடைய இளமையை எண்ணித் தங்களை வென்று, தங்கள் நாட்டைக் கைப்பற்ற எண்ணிய வேளிர்குலத் தலைவர்களும், பாண்டியனும் செய்த சூழ்ச்சியில் எனது தந்தையாரும் சிக்குண்டார் என்பது தாங்கள் அறிந்த செய்தியே. எனது தந்தையார் அவர்களுக்கு இடங்கொடுத்தது என் தந்தையாரின் பிழையல்ல; அது விதியின் பிழையென்றே நான் கருதுகிறேன். நான் சிறியவனுயினும் அவருடைய செயலை அன்று நான் ஆமோதிக்கவில்லை என்பதையும்

தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அப்பொழுது ஏற்பட்ட பகையின் காரணமாகவே நான் மாறு பெய ரோடு இந்த நாட்டிற்கு வந்து நாட்டியம் பயில நேர்ந் தது. அதை எண்ணியே நான் இன்னுரென்று தெரி வித்துக்கொள்ள இதுவரையிலும் விரும்பவில்லை.

கரிகாலன் : அந்தப் பழைய சம்பவங்களெல்லாம் முன்பே மறந்த விஷயம் ஆயிற்றே-அதைப்பற்றி நீங்கள் இன்னும் எதற்காக நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? இப்பொழுது சேரநாடு சோழ நாட்டோடு தோழமை பூண்டுதானே இருக்கிறது?

அத்தி : இருந்தாலும் எனது தந்தையார் தங்கள் பகைவர்களோடு சேர்ந்து கொண்டதை எண்ணி நான் மனம் வருந்துகிறேன். அதனுலேயே நான் யாரென்று தெரிவித்துக் கொள்ளாமல் எனது கலைத் திறமையால் தங்கள் மனத்திலே இடம்பெற நினைத்து வந்தேன்.

கரிகாலன் : உங்கள் நாட்டியத்தால் என்னை முற் றிலும் கவர்ந்து விட்டீர்கள். அதோடு சேரலாத னுடைய மைந்தன் என்பதாலும் எனது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவர் ஆகின்றீர்கள். சேரலாதன் வெண்ணிப் போரிலே காயமடைந்ததை எண்ணி நாணமுற்று வடக்கிருந்து உயிர் துறந்ததை நான் அறி வேன். அப்படி வடக்கிருந்து உயிர் துறந்த உமது தந்தையார் வெண்ணிப் பொரிலே வெற்றி பெற்ற என்னைவிட நல்லவர் என்று வெண்ணிக்குயத்தியார் என்ற புலவர் பாடியதை நான் ஆமோதிக்கிறேன். போரில் ஏற்படும் வெற்றியைவிட உயர்ந்த பண்பில் ஏற்படும் பெருமையை நான் இன்று மேலாக மதிப்ப தற்குச் சேரலாதனின் செய்கையே முக்கிய காரணமாக இருக்கின்றது. அவரை நான் போற்றுகிறேன். அவர் மைந்தன் என்பதற்காக உங்களையும் பாராட்டுகிறேன்.

அத்தி : அரசே, தங்களுடைய பெருந்தன்மைக்கும் பரந்த நோக்கிற்கும் நான் என்றும் கடமைப்பட்டிருக்கிறேன்.

கரிகாலன் : பழைய நிகழ்ச்சிகளை இனி நீங்கள் மறந்துவிடுங்கள். அவற்றிற்கும் உங்களுக்கும் எவ்வகையான சம்பந்தமும் இல்லையென்பதை நீங்கள் பல வகைகளிலே நிரூபித்திருக்கின்றீர்கள். மேலும் எங்கள் நாட்டுக் கலையில் ஈடுபட்டு இந்த நாட்டிற்கு வந்த நீங்கள் எங்களுக்குப் பெரிதும் உரியவராகின்றீர்.

அத்தி : சோழ வேந்தே, தங்களுடைய அன்பு என்னைப் பரவசப் படுத்துகிறது. ஓர் ஆசையை வெளிப்படுத்தலாமென்ற துணிச்சலையும் தருகின்றது.

கரிகாலன் : தங்களுடைய விருப்பத்தை வெளிப்படையாகக் கூறுங்கள்; தயக்கம் வேண்டாம்.

அத்தி : அரசே, எனது நாட்டியத்தைக் கண்டு மகிழ்ந்து தாங்களே எனக்கு ஆட்டன் என்ற பட்டம் தந்தீர்கள். தாங்களே விரும்பியளித்த பரிசு அது. அதற்காகத் தங்களைப் போற்றுகிறேன். அதே சமயத்தில் நானே விரும்பிக் கேட்கும் பரிசொன்று தங்களிடம் உள்ளது என்பதையும் பணிவோடு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அதை இப்பொழுது கேட்கலாமா?

கரிகாலன் : ஆட்டனத்தி, வெளிப்படையாக நீங்கள் விரும்புவதைக் கூறுங்கள். கலைஞர்களைச் சோழர்கள் எவ்வாறு பாராட்டுகிறார்கள் என்பதை விரைவில் அறிந்து கொள்வீர்கள்.

அத்தி : அரசே, நான் பரிசாகப் பெற விரும்பும் மாணிக்கம் ஒன்று இங்கே இந்தச் சபையிலேயே இருக்கின்றது. அது எனக்குக் கிடைக்குமானால் நான்

மிகுந்த பாக்கியம் செய்தவனுவேன், எனது கலைத் திறமையால் அந்தப் பரிசைத் தங்களிடம் வேண்டிப் பெறவே நான் இங்கு வந்தேன்.

கரிகாலன் : நீங்கள் கேட்டதும் அது உங்களுக்குக் கிடைக்கும். கேளுங்கள், இன்னும் தயக்கம் வேண்டாம்.

அத்தி : சோழ வேந்தே, நான் மறைவாக இந்த நாட்டிலிருந்து நாட்டியம் பயின்று கொண்டிருந்த காலத்திலே சேர நாட்டிற்குத் திரும்புவதற்கு முன்னல் எனக்கு ஒரு பெரு வாய்ப்புக் கிடைத்தது. சென்ற ஆண்டு புதுப் புனலாட்டு விழாவின்போது தங்களுடைய மகள் ஆதிமந்தியின் நடனத்தை நான் கண்டேன். தங்கள் மகளின் நடனமும், பாட்டும், அழகும் என் உள்ளத்தை அன்றே கொள்ளை கொண்டு விட்டன. அவளைத் தாங்கள் எனக்கு மனைவியாக அளிக்கவேண்டும் என்று பணிவோடு வேண்டிக் கொள்கிறேன்.

கரிகாலன் : ஆட்டனத்தி, என் மகளும் உங்கள் கலைச் சிறப்பில் சிந்தை பறிகொடுத்து நிற்பதை நான் உணர்கிறேன். ஆதலால் உங்கள் வேண்டுகோளை நிறைவேற்றுவதில் அவளுக்கும் மகிழ்ச்சியே ஏற்படு மென்று நான் திண்ணமாக நம்புகிறேன்.

[ஆதிமந்தியின் பக்கமாக அரசன் பார்க்கிறுன். வேண்மாளும் ஆவலோடு பார்க்கிறுள். ஆதி மந்தி நாணத்தோடு தலை குனிந்து புன்முறுவல் பூத்து நிற்கிறுள்.]

அதோடு ஆதிமந்தியும் நாணத்தோடு தலை குனிந்து தனது முழுச்சம்மதத்தையும் தெரிவிப்பதுபோல் நிற் கிறுள். ஆட்டனத்தி, உங்கள் விருப்பத்தின்படியே அவளை உங்களுக்கு மனைவியாகத் தருகிறேன். வேண்மாள் உனக்கும் இது சம்மதந்தானே?

[வேண்மாள் ஆவலோடு எழுந்து மகளருகில் சென்று அவளை அணைத்துக்கொள்கிருள். காதில் ஏதோ கூறுகிருள். பிறகு அரசனுக்குப் பதில் தெரிவிக்கிருள்.]

வேண்மாள் : இதில் எனக்கென்ன தடையிருக்கப் போகிறது? என் மகளின் உள்ளம் எவ்வாறிருக்குமோ என்றுதான் நான் முதலில் சிறிது கலக்கமடைந்தேன். ஆனால் அதை இப்பொழுது நான் நன்ருக அறிந்து அவள் சம்மதத்தையும் பெற்றுவிட்டேன். எனக்கு இது பெரிய மகிழ்ச்சிக்குரிய நாளாகும்.

[ஆட்டனத்தி கரிகாலனுக்கும் வேண்மாளுக்கும் நன்றி தெரிவிக்கும் வகையில் தலைவணங்கு கிருன். பிறகு அவன் பார்வை ஆதிமந்தியின் பக்கம் செல்லுகிறது. அவள் புன்முறுவலோடு தலை குனிகின்ருள்,]

கரிகாலன் : அமைச்சரே, விரைவில் திருமணத் திற்கு வேண்டிய ஏற்பாடுகளைகளைக் கவனியுங்கள். (அங்கேயுள்ள பெருமக்களைப் பார்த்து )சோழ நாட்டுப் பெருங்குடி மக்களே, உங்கள் அனைவருக்கும் இந்தத் திருமணம் மகிழ்ச்சியளிக்குமென்று நம்புகிறேன். சேர நாட்டு இளவரசர் எல்லா வகைகளிலும் நமது இளவர சிக்கு ஏற்ற கணவராகத் தகுந்தவர்.

[சபையில் கைதட்டலும் மகிழ்ச்சி ஆரவாரமும் கேட்கின்றது.]

சேனுபதி : இதைவிடப் பொருத்தமான ஒரு திரு மண ஏற்பாடு இருக்கமுடியுமா? எனக்கு இது மிகுந்த மகிழ்ச்சியளிக்கிறது.

ஒருகுரல்: வாழ்க ஆட்டனத்தி! வாழ்க ஆதிமந்தி!!

அனைவரும் : வாழ்க! வாழ்க!

[சபையோர் அனைவரும் எழுகின்றனர்; சபை கலையத் தொடங்கிறது.]

திரை

## காட்சி மூன்று

[மாலை நேரம் சேரநாட்டில் அழகிய சோலை. ஆதிமந்தியும் ஆட்டனத்தியும் ஒரு பாறையின்மீது அமர்ந்து உரையாடிக்கொண்டிருக்கிறார்கள்.]

ஆதிமந்தி : உங்கள் நாட்டு மயில் எத்தனை அழகாக ஆடுகின்றது!

அத்தி: உனது பேரழகைக் கண்டால், அந்த மயில் தானா ஆடும்?

ஆதிமந்தி (சிரித்துக்கொண்டே) : நீங்களும் அதற்காகத்தான் ஆடினீர்களா?

அத்தி : உன்னைப் பரிசாகப் பெற வேண்டும் என்ற ஆசையாலேயே நான் இந்த நாட்டியக் கலையைக் கற்றேன்.

ஆதிமந்தி (சிரித்துக்கொண்டே) : இதை நான் நம்பவே மாட்டேன். சோழ நாட்டுக்கு நீங்கள் நாட்டியக் கலையைக் கற்க வந்த பிறகுதானே என்னைப்பற்றித் தெரிந்து கொண்டீர்கள்?

அத்தி : உனது அழகும் நாட்டியக் கலைச் சிறப்பும் வானலோகத்திற்குக் கூட எட்டிவிடுமே? அப்படியிருக்க இந்த மலைகளைத் தாண்டி எங்கள் நாட்டிற்கு வராதா என்ன?

ஆதிமந்தி : போங்கள், உங்கள் புகழ்ச்சியெல்லாம் போதும். இப்படியெல்லாம் பேசுவதற்கு இந்த ஆண்களுக்கு யார்தான் கற்றுக் கொடுக்கிறார்களோ?

அத்தி : அழகாக மலர்ந்து விளங்கும் தாமரையைக் கண்டால் வண்டு தானாகவே ரீங்காரம் செய்கிறது. அதற்குச் சொல்லிக்கொடுக்க வேண்டுமா என்ன?

ஆதிமந்தி : அந்த வண்டைப்பற்றி என்னிடம் பேசாதீர்கள். அதைக் கண்டால் எனக்குப் பிடிக்கிறதே இல்லை.

அத்தி : வண்டின் மேலே ஏன் உனக்கு அத்தனை கோபம்? அதன் இன்னிசை உனக்குப் பிடிக்கவில்லையா?

ஆதிமந்தி : இசையால் மயக்கிவிட்டுப் புதுப்புது மலர்களைத் தேடித் தேனுண்ணச் செல்லும் அற்ப குணம் படைத்ததுதானே அது? அதற்கு விரும்பித் தேனைக் கொடுத்த மலரை அடுத்த கணத்திலே அது நினைக்கிறதா?

அத்தி ; ஓகோ அப்படியா! நீ குறிக்கிற விஷயம் எனக்குப் புரிகிறது. சேரநாட்டு ஆடவர்கள் வண்டுகளல்ல.

ஆதிமந்தி : அவர்கள் மலையிலிருந்து திடுதிடுவென்று விழுகின்ற அருவிகள். அப்படித்தானே?

அத்தி : மலையிலே இருந்து விழுகின்ற அருவியின் வேகம் அவர்களுடைய அன்பிற்கு உண்டு. அந்த வேகத்தைச் சோழநாடு அறிய முடியாது.

ஆதிமந்தி (சிரித்துக்கொண்டே): அப்படிச்சொல்லி விடாதீர்கள். அதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. அதன் வேகத்தை அறிகின்றபோதே எங்கள் நாட்டுக் காவிரியின் அமைதியான போக்கை நான் போற்றுகிறேன். இந்த மலையருவியின் வேகத்தைக் கண்டு நான் பயப்படுகிறேன். வேகமாக விழுகின்ற வெள்ளம் திடீரென்று நின்றுபோகும். ஆனல், எங்கள் காவிரி அப்படியல்ல. அது என்றும் வற்ருத ஜீவநதி.

அத்தி (சற்று கோபத்தோடு) : ஆதி, என்னுடைய அன்பை வற்றிப்போகும் மலையருவியோடு ஒப்பிடுகிருயா?

ஆதிமந்தி : நான் அப்படிச் சொல்லவில்லையே? உங்கள் நாட்டு மலையருவியைப் பற்றி நீங்கள் பெருமையாகப் பேசினீர்கள். எங்கள் நாட்டுக் காவிரியின் பெருமையை நான் பேசினேன்.

அத்தி : இருந்தாலும் உன் உள்ளத்திலே இருக்கிற எண்ணத்தை நான் அறியாமலில்லை. உனக்கு எதற்காக இப்படிச் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது? நாம் கூடி வாழ்ந்து வந்துள்ள இந்த நான்கு மாதங்களிலே என் மனம் வேறுபட்டதை என்றாவது நீ அறிந்தாயா?

ஆதிமந்தி (அமைதியாக) : ஒருநாளும் கிடையாது. என்னுடைய பேச்சு அப்படி ஏதாவது குறிப்பிடுவதாக உங்களுக்குத் தோன்றினால் தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள்.

அத்தி (ஆதிமந்தியைத் தன்னருகே இழுத்துக் கொண்டு, அன்பு ததும்பும் குரலில்) : ஆதி, உன்னை மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? எனது அளவு கடந்த காதலை உணராமல் பேசுவதாக நினைத்துத்தான் கொஞ்சம் பொறுமை இழந்தது போலானேன்.

ஆதிமந்தி : நீங்கள் என்னை உங்கள் அன்பு வெள்ளத்திலே திளைக்கச் செய்துகொண்டிருக்கிறீர்கள்—அதை நான் உணராமல் இல்லை; அதை முற்றிலும் உணர்ந்துதான் எனக்குப் பயமும் ஏற்பட்டிருக்கிறது.

அத்தி : பயம்? எதற்குப் பயம்?

ஆதிமந்தி : இவ்வளவு ஆழ்ந்த காதல் என்றும் இப்படியே இருக்க வேண்டுமே என்றுதான். காட்டாற்று வெள்ளம்போலப் பொங்கிப் பெருகுகின்ற காதலைக் கண்டால் பெண்ணின் உள்ளம் மகிழ்ச்சியடைந்தாலும் பயமும் கொள்ளுகிறது. அதனால்தான் எனக்குக் காவிரியின் நினைப்பு வந்தது.

அத்தி கட்டி அணைத்துக்கொண்டு : சோழநாட்டுக் காரர்கள் அந்தக் காவிரியைக் கொஞ்சம் நேரம்கூட மறக்கமாட்டார்கள் போலிருக்கிறது. அடடா, அந்தக் காவிரியாக நான் இருக்கக்கூடாதா?

ஆதிமந்தி தழுதழுத்த குரலில்) : காவிரி எனக்குத் தாய்—நீங்கள் எனக்கு உயிர். உயிரை மறந்துவிட்டுப் பிறகு தாயை மட்டும் நினைக்க முடியுமா

அந்தி : ஆதி, உனது உள்ளம் அந்தக் காவிரிக் கரையிலே மலரும் அனிச்ச மலரைப் போன்றது. மோப்பக் குழையும் அனிச்சம்' என்று கூறியிருக்கிறார் களே அதைப் போல உன்னுடைய் உள்ளம் அவ்வளவு மென்மையானது என்பதை நான் நன்றாக உணர்கிறேன்.

ஆதிமந்தி : உணர்ந்து கொண்டால் மட்டும் போதாது. அந்த மலர் கொஞ்சம்கூட வாடாமலிருக் கும்படி நீங்கள் செய்யமுடியுமானால் அதுவே எனது பெரும் பாக்கியம்.

அத்தி (புன்முறுவலோடு) : காற்று, சற்று ஓங்கி வீசினாலும் வாட்டமடைகின்ற அந்த மலர் இந்தக் காட்டாற்று வெள்ளத்திலே எப்படியெல்லாம் துன்ப மடையுமோ என்று கலங்குகிறாயா, ஆதி? இந்தக் காட் டாற்று வெள்ளம் அதற்கு மாறாத இளமையும் உயிரும் கொடுக்கும் என்பதை நீ உறுதியாக நம்பு.

ஆதிமந்தி (பெருமகிழ்ச்சியோடு அத்தியின் மார்பகத் திலே முகத்தை வைத்துக்கொண்டு) : நிறைந்த அன்பு இருக்கின்ற இடத்திலே எப்படியோ நிறைந்த பயமும் பிறக்கின்றது. இந்த அன்பு மாயமாக மறைந்துவிடக் கூடாதே என்று நெஞ்சு அடித்துக்கொள்கிறது.

அத்தி (ஆதிமந்தியைக் கையால் அணைத்துக் கொண்டு) : உனது பயத்தையும் கலக்கத்தையும் கண்டு

எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. எதற்காக இந்த வீண் பயம்?

ஆதிமந்தி: நான் எனது உள்ளத்தைத் திறந்து அதிலே ஒளிந்துகொண்டிருக்கிற அந்தப் பயத்தைச் சொல்லலாமா?

அத்தி: உடனே சொல்லிவிடு. வெளிப்படையாகப் பேசிவிட்டால் பயம் தானுகப் போய்விடும்.

ஆதிமந்தி: உங்களுடைய அன்பின் முழுவேகத்தையும் உணர்ந்து நான் உள்ளம் பூரிக்கிறேன். அப்படிப் பூரிக்கின்ற போதே நான் பரிசாக உங்களுக்குக் கிடைத்த பொருள்தானே; இருவருமாகச் சந்தித்துக் காதல் கொண்டு அந்தக் காதலின் விளைவாகக் கிடைத்த பொருளல்லவே என்று நான் கலங்குகின்றேன். பரிசுப் பொருளிடத்திலே அத்தனை மாருத காதல் ஏற்பட முடியுமா?

[கலக்கத்தோடும் கெஞ்சிய பார்வையோடும் அத்தியைப் பார்க்கிருள். அத்தி அவளை அணைத்து அவள் கன்னத்தைத் தீண்டுகிருன்.]

அத்தி: காவிரித் தண்ணீருக்கு நான் தோற்றுத் தான் போனேன், ஆதி. அது எத்தனை அற்புதமாக உணர்ச்சிகளையும் அறிவையும் உண்டாக்கியிருக்கிறது! அந்தக் காவிரியின் வற்ருத வளத்திற்கும் எங்கள் மேற்கு மலைத்தொடர் முக்கிய காரணம் என்பதை நீ அறிய மாட்டாயா?

ஆதிமந்தி: உங்கள் மலைத்தொடருக்கு அந்தக் கருணை மாருமல் இருக்கவேண்டும் என்பதுதான் எனது வேண்டுகோள்.

அத்தி: ஆதி, இந்த பயத்தையெல்லாம் விட்டு விட்டு அற்புதமாக ஒரு நடனம் ஆடு. இன்பமான இந்த மாலை நேரத்தை இப்படிக் கலக்கத்திலும் பயத்திலும் வீணுக்கவேண்டாம்.

ஆதிமந்தி : புதிதாக நீங்கள் ஒரு பாட்டுப் புனைந் திர்களே...?

அத்தி : நான் அதைப் பாடுகிறேன்—நீ அபிநயம் பிடிக்கிறாயா?

[தனது சம்மதத்தை ஆதிமந்தி தலையசைத்து மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறாள். பாறையில் அமர்ந்து அத்தி பாடுகிறான். அவள் கூடவே பாடிக்கொண்டு அபிநயம் பிடிக்கிறாள்.]

(பாட்டு)

பல்லவி

என்னென்று சொல்வேனடி—தோழீ
எனக்கவர் தந்தபே ரின்பத்தை வாயினால்
(என்னென்று)

அநுபல்லவி

என் னெஞ்சந்தான் கவர்ந்த மின்னஞ்சும் வேல்முருகன்
வந் தென்னைக் கைபிடித்தே முத்தமிட்டான் (என்னென்று)

சரணம்

குங்கும வண்ணனவன் கூந்தலில் பூமுடித்தான்
கொஞ்சியென்னை யணைத்தே கூடவா என்று சொன்னான்
இங்கென்னுடல் மறந்தேன் இருவினைதான் துறந்தேன்
துன்பமும் தீர்ந்ததடி (பிறவித்) தொல்லையும் தீர்ந்ததடி
(என்னென்று)

[பல்லவியை இருவருமாகப் பாட ஆதிமந்தி மெய் மறந்து ஆடுகிறாள். நடனம் உணர்ச்சியின் சிகரத்திலே முடிகிறது.]

அத்தி : ஆகா, அற்புதம் அற்புதம்!

ஆதிமந்தி (பெருமகிழ்ச்சியோடு) : நீங்கள் எழுதிய பாட்டு வேறு எப்படி யிருக்கும்? அற்புதமாகத்தான் இருக்கும்.

அத்தி : நான் உனது நடனத்தையல்லவா சொல்லு கிறேன்?

ஆதிமந்தி : இப்பொழுது நான் அபிநயம் பிடித்த தெல்லாம் நீங்கள் கற்றுக்கொடுத்ததுதானே?

அத்தி ; நாம் புதுப் புனல் விழாவிற்காக உங்கள் சோழநாட்டிற்குப் போகும்போது நீ கட்டாயம் நடனம் செய்யவேண்டும்.

ஆதிமந்தி : நானு......? பிறகு நீங்கள்? இனிமேல் உங்கள் நடனத்தையல்லவா அங்கே அனைவரும் எதிர் பார்த்திருப்பார்கள்.

அத்தி : நீ கூட இருக்கும்போது எனது ஆடலை உனது நாட்டார் மதிக்கவா போகிறார்கள்? உங்களுக்கு உங்கள் நாட்டுக் கலைதானே பெரிது?

ஆதிமந்தி (சிரித்துக்கொண்டே) : ஓகோ நானாடு வது மட்டமாக இருந்தாலும் எங்கள் நாட்டார் என் னுடைய ஆடலைத்தான் பாராட்டுவார்கள் என்கிறீர் களோ?

அத்தி : மட்டமென்று நான் சொல்லவில்லையே?

ஆதிமந்தி : உயர்ந்த கலை எங்கிருந்து வந்தாலும் சோழநாட்டார் அதைப் போற்றுவார்கள். எங்கள் நாட்டார் மிகுந்த பரந்த நோக்கமுடையவர்கள்.

அத்தி : உங்களுடைய பரந்த நோக்கத்தை அன்று பார்க்கலாமே?

ஆதிமந்தி : அன்று பார்ப்பதென்ன? உங்கள் கலை யைப் பாராட்டித்தானே உயர்ந்த பட்டம் கொடுத்த தோடு அவர்கள் பெண்ணையும் கொடுத்தார்கள்? இதை விட வேறு சான்று வேண்டுமா?

அத்தி : ஆடற் கலையைக் கண்டு மகிழ்ந்து பெண் கொடுத்தது நீங்கள் புதிதாக ஒன்றும் செய்துவிட வில்லையே? நாங்கள் முன்பே செய்ததைப் பார்த்துத் தானே நீங்கள் இப்பொழுது செய்திருக்கிறீர்கள்? ஆடற் கலைக்காகப் பெண் கொடுப்பது எங்களுக்குப் புதி தல்லவே ?

ஆதிமந்தி (யோசனையோடு) : நீங்கள் அப்படி என்ன செய்திருக்கிறீர்கள்?

அத்தி : சிவபெருமானுடைய ஆடலைப் பாராட்டி மலையரசன்தானே முதலில் தன் பெண்ணைப் பரிசாகக் கொடுத்தான்?

ஆதிமந்தி (மகிழ்ச்சியோடு சிரித்து) : ஓகோ அப்ப டியா? அந்த நடராஜர் தில்லையில் செய்தது போல நீங்களும் எங்கள் நாட்டிற்கு வந்து எல்லோர் முன்பும் ஆடி என்னைத் தோற்கடித்து அவமானப் படுத்திவிடா தீர்கள்.

அத்தி : இல்லை...இல்லை......அந்த நடராஜரைப் போல உடம்பில் பாதியைக் கொடுக்காமல் உனக்கு என் உடல் உள்ளம் எல்லாம் முழுதுங் கொடுத்து விடுகிறேன்.

ஆதிமந்தி (அத்தியின் மார்பின்மேல் சாய்ந்து கொண்டு தழுதழுத்த குரலில்) : அன்ப, நமது வாழ் நாள் இப்படியே இன்பமாகக் கழிய வேண்டுமென்று அந்த நடராஜப் பெருமானையே நாம் வேண்டிக் கொள் வோம்...

[தோழிப் பெண் ஒருத்தி வந்து எதிராக வணங்கி நிற்கிறாள். ஆதிமந்தி சற்று விலகிப்போகிறாள்.]

அத்தி : என்ன...ஏதாவது சேதியுண்டா?

தோழி : சோழநாட்டு அரசரிடமிருந்து வீரர்கள் சிலர் வந்திருக்கிறார்கள்.

ஆதிமந்தி : என்ன செய்தியோ தெரியவில்லையே!

தோழி : புதுப்புனல் விழாவிற்காக அழைப்புக் கொண்டு வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது.

ஆதிமந்தி : ஓகோ, அதுதானா?—இதோ நான் வருகிறேன்.

அத்தி : ஆதி, விழா அழைப்பு என்று கேட்ட மகிழ்ச்சியிலே என்னைக்கூட மறந்துவிட்டாயே? நான் வரவேண்டாமா?

ஆதிமந்தி: உங்களுக்குத்தான் தனிப்பட்ட அழைப்பு வந்திருக்கும், வாருங்கள் போய்ப் பார்க்கலாம்.

[தோழி முன்னால் செல்லுகிறாள். ஆதிமந்தியும் அத்தியும் பின்னால் செல்லுகிறார்கள்.]

திரை

# இரண்டாம் அங்கம்

## காட்சி ஒன்று

[கழார் நகரத்திலே ஒரு வீதி. காலை நேரம். புதுப்புனல் விழாவிற்காகப் புறப்பட்ட மாரனும் சாத்தனும் தற்செயலாகச் சந்திக்கிறார்கள். கருநிறமான மாரன் ஒரு சிறிய மூட்டையுடன் காட்சியளிக்கின்றான். அழுக்கு வடிவமான சாத்தனும் ஒரு சிறு மூட்டை வைத்திருக்கிறான்.]

மாரன் : யாரு சாத்தனா? எங்கே இப்படிக் காலையிலே கிளம்பிட்டியே?

சாத்தன் : அதுதாண்டா புதுப்புனல் விளாவிலே இன்னிக்கு—காவிரியிலே ஒரு முளுக்குப் போட்டு வர்ரதுக்குப் போரேன்.

மாரன் : போக வேண்டியதுதான்—கட்டாயமாகப் போக வேண்டியதுதான். வருசத்திலே ஒரு நாளைக் காவது உன் உடம்பைக் கழுவ வேண்டாமா?

சாத்தன் : (ஏண்டா உன்னுட வளக்கத்தைச் சொல்லரயா? நான் தைப் பொங்கலுக்கும் குளிக்கிறதுண்டுடா. சும்மா என்னமோ நினைச்சுக்காதே)

மாரன் : சரி சரி வருசத்திலே ரெண்டு நாளா? அதுக்கு மேலே குளிச்சா உடம்பு என்னத்துக்காகும்? அதென்ன கக்கத்திலே மூட்டை?

சாத்தன் : புதுவேட்டி துணியெல்லாம் வச்சிருக்கிறேன். உன்னுடைய மூட்டை என்ன?

மாரன் : முறுக்கு சுண்டல்...எல்லாம் நெய்யிலே பண்ணினது.

சாத்தன் : ஓகோ அங்கே விளாவிலே ஏராளமா வருவாங்களே, எல்லோருக்கும் அங்கே விக்கிரதுக்கா? கெட்டிக்கார ஆளுடா நீ—எதிலேயும் காசு சம்பாதிக்கிறதிலேயே உனக்கு நோட்டம்—ஆமா, காவிரியிலே ஒரு முழுக்காவது போடுவையா, அட அதுகூட இல்லையா?

மாரன் : புது வெள்ளத்திலே நான் குளிக்கிற வளக்கமில்லே.

சாத்தன் : அதென்னடா அப்பா? ஊருக்கெல்லாம் ஒரு விளா வர்ரபோது உனக்கென்னடா இப்படி எதிர் வாதம்?

மாரன் : அதொன்னுமில்லே—இந்தப் புதுவெள்ளம் ஒரே வண்டலா இருக்குதோ இல்லையோ?—உடம்பிலே பட்டா உடம்பே நிறங்கெட்டுப் போகுது.

சாத்தன் : ஐயே—ஆமாம் ரொம்ப மெய்தான். உடம்பு தங்கமாட்டம் இப்போது மினுக்குது—காவிரி

வெள்ளம் மேலே பட்டா அதனுடைய பளபளப்புக் கெட்டுத்தான் போகும்.

மாரன் : ஏண்டா, என் எடம்புக்கு என்னடா குறைச்சல்?

சாத்தன் : ஒண்ணும் குறைச்சலில்லே—குருதுமாதிரி தான் இருக்குது. ஆனல், அந்த நிறம் இருக்குதே—தீயைத் தண்ணீரிலே போட்டு அவிச்ச மாதிரிதான்—போயும் போயும் உனக்கு மாரன்னு பேர் வச்சாங்களே?

மாரன் : ஏண்டா மாரன்கிற பேரிலே என்னடா தப்பு?

சாத்தன் : தப்பொன்னுமில்லே — ரொம்ப அழ காகத்தான் இருக்குது. கருப்பாட்டுக்கு வெள்ளாடுன்னு பேர் வச்சாங்களே அப்படித்தான், மாரன்ஞ மன்மதன் இல்லையா?

மாரன் : மன்மதன் மட்டும் என்னைவிட ரொம்ப அளகா இருப்பானே? அவனைக் கொண்டுவாடா பார்க் கலாம்.

சாத்தன்: டேய் இன்னிக்கு, சேரநாட்டு இளவரசர் ஆட்டனத்தியும் நம்ம ராசா மகள் ஆதிமந்தியும் நாட் டியம் ஆடப்போருக—அங்கே வந்து பாரு மன்மதனையும் ரதியையும் பார்க்க வேணும்ஞ—

மாரன் : எங்கடா ஆடப்போருங்க—அரண்மனை யிலா?

சாத்தன் : இல்லீடா, புதுவெள்ள விளா நடக்கிற தில்லே—காவிரிக்கரையிலே—பெரிய பெரிய கொட்டகை யெல்லாம் போட்டு அலங்காரம் செய்திருக்கிறதே—அங்கேதாண்டா—

மாரன் : சாத்தா, இன்னும் என்னவெல்லாம் நடக்குதாம்.

சாத்தன் : எத்தனையோ ஆட்டங்களும், வேடிக்கை களும் நடக்கும்—பொய்க்கால் குதிரை, கரகம் எல்லாம் உண்டு. ஏண்டா மாரா உனக்கு விசயம் தெரியாதா? போன வருசத்தைவிட இந்த வருசம் ரொம்ப வேடிக்கை இருக்கும்.

மாரன் : அல்லாந் தெரியும்—கூட்டம் நிறைய வருவாங்கன்னுதான் அதுக்குத் தகுந்தாப்பிலே நிறைய முறுக்கு சுண்டல் தயார் பண்ணியிருக்கிறேன்.

சாத்தன் : அடடே, உன்னுடைய வியாபாரத்துக்கு கணக்குப் பார்க்கிறாயா? மாரா, அதிருக்கட்டும். நம்ம கணக்கிலே நாலு முறுக்கு இப்படிக் கொடுத்திட்டுப்போ.

மாரன் : ஏண்டா, போனவருசம் வாங்கினதே இன்னும் குடுக்கல்லே. முதமுதன்னு கடஞ கேட்கிறாய்?

சாத்தன் : அடே, பணம் எங்கே போகுது? எங்கிட் டிருந்தா ராசா அரண்மனையிலே இருக்கிறமாதிரி.

[முறுக்கு மூட்டையைத் தொடப் போகிறான்.]

மாரன் : டேய், உன்னுடைய அளுக்குக் கையில் மொத மொதன்னு தொடாதே—வியாபாரமே கெட்டுப் போகும்.

சாத்தன் : பணம் வேணும்னுக் கைமேலே வாங்கிக் கடா—சும்மா குறும்பு பேசாதே.

மாரன் : டேய், போன வருசம் அப்படிச் சொல்லி வாங்கித் தின்னுபோட்டுத் தானே அப்புறம் கையை விரிச்சாய்? போடா—எனக்கு நேரமாகுது.

[புறப்படுகிறான். சாத்தன் முறைத்துப் பார்க் கிறான்.]

சாத்தன் : (மாரன் போன பிறகு) : பிசுநாறிப் பயல்—காசு கைமேலே வேணுமாம் — இவனுடைய சிக்குப் பிடித்து நாறிப்போன முறுக்கு யாருக்கு வேணு மாம்?

[கம்பீரமாக நடந்து போகிறான்.]

திரை

## காட்சி இரண்டு

*[கழார் நகரத்தின் அருகிலே காவிரி மணற் பரப்பிலே மக்கள் திரளாகக் கூடியிருக்கிறார்கள். புதிய ஆடைகளும் புதிய அணிகளுமாக மக்கள் மகிழ்ச்சி பொங்கக் காட்சியளிக்கிறார்கள். ஒருவன் தலையில் கரகம் வைத்து ஆடிக்கொண்டிருக்கிறான். காலை சுமார் ஒன்பது மணியிருக்கும்.]*

*(பாட்டு)*

ஆதியிலே அமைந்த சக்தி எங்கள் முத்துமாரி
ஆளுகின்றாள் பூமியெல்லாம் சிங்கத்தின் மேலேறி
கன்னபுரம் வந்திருப்பாள் எங்கள் முத்துமாரி
காடுமலை வந்திருப்பாள் சிங்கத்தின் மேலேறி
என்ன சொல்வோம் உன் மகிமை எங்கள் முத்துமாரி
எங்களை நீ காக்க வேணும் சிங்கத்தின் மேலேறி
தஞ்சமென்று வந்தடைந்தோம் எங்கள் முத்துமாரி
தயவு வைத்துக் காக்க வேணும் சிங்கத்தின் மேலேறி
பார்க்காமலே நீ யிருந்தால் எங்கள் முத்துமாரி
பஞ்சமெல்லாம் தீர்ந்துடுமோ சிங்கத்தின் மேலேறி
மாவிளக்குக் கொண்டு வந்தோம் எங்கள் முத்துமாரி
மனது வைத்துக் காக்க வேணும் சிங்கத்தின் மேலேறி.

*[துரித காலத்திற்குச் சென்று கரக ஆட்டம் முடிகிறது. மக்கள் அந்த ஆட்டத்தைப் பாராட்டிக் கொண்டு மெதுவாகக் கலைகிறார்கள். கரகம் ஆடுவோனும் தன்னைப் பாராட்டிய எல்லோருக்கும் வணக்கம் செலுத்திவிட்டு மறைகிறான். சாத்தனும் மாரனும் எதிர் எதிர்ப்பக்கங்களிலிருந்து வருகிறார்கள். மாரன் தலையிலே முறுக்குக் கூடை இருக்கிறது.]*

*சாத்தன் :* அடடே, கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தாப்பிலே நீயே வந்துவிட்டாய். மாரா உன்னைத்தான் தேடி வந்தேன்.

*மாரன் :* எதுக்கு என் மேலே அத்தனை அக்கறை?

சாத்தன் : வியாபாரமெல்லாம் பலமா நடக்குதா?

மாரன் : அதுக்கொன்னும் குறைவில்லே—இந்தத் தடவை நம்ம மாப்பிள்ளே ராஜாவும் நம்ம ராஜகுமாரியும் வந்திருக்காங்கல்லோ—அவங்களேப் பார்க்க ஒரே கூட்டம். எனக்கும் நல்ல வியாபாரம். அவுங்க சொகமா இருக்க வேணும். வருசா வருசம் இந்தப் புதுநீர் விழாவுக்கு வந்து எனக்கு இப்படி நல்ல வரும்படி கிடைக்கவேணும்.

சாத்தன் : மாரா, காலையில்தான் மொதமொதன்னு கடன் குடுக்கப்படாதுன்னு சொன்னே. நானும் சரின்னு போயிட்டேன். இப்போதுதான் உனக்கு வியாபாரம் ஆயிட்டுதே—எனக்கு இப்படி ஒரு இருபது முறுக்குக் கொடு.

மாரன் (திடுக்கிட்டு) : இருபது முறுக்கா? அதுவும் கடனுக்கா?

சாத்தன் (அலட்சியமாக) : அடே, நாளைக்கு வீட்டுக்கு வந்ததும் உங்காசை வாங்கிக்கோ? எங்காவது ஓடியா போகுது?

மாரன் : ஏண்டா டேய், முன்னே வாங்கின கடனே இன்னும் கொடுக்கல்லே—இன்னும் கடன் கேட்க உனக்கு வாயிருக்குதா?

சாத்தன் : அடே, எல்லாம் சேத்தி வாங்கிக்கலாம் கொடு—வாயிருக்குதான்னு கேக்கிறயே—முறுக்கைக் கொடுத்துப் பாரு—வாயிருக்குதா இல்லையான்னு தெரியும

மாரன் : இந்தக் கூடையை இப்பத்தாண்டா எடுத்தேன்—இன்னும் ஒரு முறுக்குக்கூட விக்கலே.

சாத்தன் : டேய், காலையிலும் இப்படித்தாண்டா சொல்லி ஏமாத்திஞய்? இந்தக் குருட்டு நம்பிக்கையெல்லாம் எதுக்காக நீங்க உண்டாக்கி இருக்கிறீங்கன்னு இப்பத்தாண்டா தெரிஞ்சுது எனக்கு.

மாரன் : எதுக்கு உண்டாக்கி யிருக்குதாம்?

சாத்தன் : எதுக்கு? என்னைப்போல ஆளுகளை ஏமாத்தத்தான். இருக்கிறவன் இல்லாதவனை ஏமாத்தற தந்திரமடா இது. காலையிலே வந்தா—காலங்காத் தாலே கொடுக்க முடியாதுடாங்கிறது—ராத்திரி வந்தா —இருட்டு நேரத்திலே கடன் கொடுக்கப்படாதுங்கிறது —வெள்ளிக் கிழமை வந்தா—இன்னிக்கி வெள்ளிக் கிழமைங்கிறது—இன்னொரு நாள் வந்தா இன்னைக்கு என் பிறந்தநாள்—இன்னைக்கு நான் கடன் கொடுக்கிற தில்லேங்கிறது—வாரத்திலே ஏழு நாளைக்கும் ஏதாவது இப்படி சாக்குக் கண்டு பிடிக்கிறது.

மாரன் : டேய் சாத்தா, சும்மா ஏண்டா ஊரை யெல்லாம் பேசராய்? அன்னைக்கு நீயே என்கிட்ட இதே சாக்குத்தான் சொன்னாய்?

சாத்தன் : நானெங்கடா சொன்னேன்?

மாரன் : ஏண்டா, மாவரைக்கிற கல்லொன்னு அடிச்சுக் கொடுக்கச் சொன்னதுக்கு நீயும் அன்னைக்கும் திங்கட்கிழமைகடனு அடிக்கமாட்டான்னு சொன்னயோ இல்லையோ?

சாத்தன் (மாரனிடம் வாதாட்டத்திலே தோல்வி யடைந்து கொஞ்ச தூரம் திரும்பிச் சென்று பிறகு சிரித்துக் கொண்டே வந்து) : மாரா, அதெல்லாங் கிடக்குதடா—சமயத்துக்கு என்ன வேணும்னாலும் நமக்கு லாபமா இருக்கிறப்படி சொல்லத்தான் வேணும் —நான் நாளைக்கே உனக்கு ஒரு கல்லு அடிச்சுக் கொடுத் திடறேன். பளைய பாக்கி புதுப்பாக்கி எல்லாத்தையும் அதிலே தீத்துடறேன். எங்கே இப்படி முறுக்கை எடு.

மாரன் : டேய், என்ன பண்ணினாலும் முறுக்கை மாத்திரம் மறக்கமாட்டாய். சரி வா. அந்தப் பக்கத்திலே

பெரிய கொட்டகையில்லே? அங்கே நம்ம இளவரசியும் சேரநாட்டு இளவரசரும் நாட்டியம் ஆடறுங்களாம்—அங்கேபோய் நாலு காசுக்கு வித்துட்டு அப்புறம் உனக்கு அளுகிறேன் வா.

சாத்தன் : ஏண்டா எனக்கு அளுகிறுய்? சிரிச்சுக் கிட்டுக் கொடுக்கப்படாதா? நான் கொடுக்கிற காசு அளுகுமா?

மாரன் : நீ ரொம்பக் காசு கொடுத்தீவன்தான்—வாடா போகலாம்.

சாத்தன் : கொட்டகையிலே நாட்டியமா?

மாரன் : ஆமாண்டா, ஆதிமந்தி, ஆட்டனத்தி நாட்டியம்டா...பார்க்கக் கொடுத்து வைக்க வேணும்டா.

சாத்தன் : டேய், மாரா—நீ நாட்டியம் பார்க்கவா போறாய்? ஏண்டா உனக்கு நாட்டியம்னு என்னன்னு தெரியுமாடா?

மாரன் : உனக்குத்தான் ரொம்பத் தெரியுமோ?

சாத்தன் : ஏண்டா, அங்கே கூட்டம் அதிகமா இருக்கும், முறுக்கு நல்லா வியாபாரமாகும்னுதாண்டா ஓடறே?

மாரன் : சாத்தா, கண்ணு நாட்டியத்தைப் பார்த்தா வாய்க்கு வேலை வாண்டாமா?

சாத்தன் (தலையை அசைத்துக் கொண்டு) : ஆமா, ஆமா, வேணும் வேணும். அங்கே ராசா மக்களெல்லாம் கண்ணுக்கு வேலை கொடுத்தா உன்னுடைய முறுக்கு வாய்க்கு வேலை கொடுக்கத்தான் வேணும். போடா போ.

மாரன் (நடந்துகொண்டே) : அப்போ, உனக்கு முறுக்கு வேண்டாமே? கண்ணுக்கு விருந்தே போதுமா?

சாத்தன் (மாரனைப் பின் தொடர்ந்து கொண்டே) : டேய், அப்படிச் சொல்லி என்னை ஏமாத்த முடியாதுடா—வாடா.

[போகிறார்கள்.]

திரை

## காட்சி மூன்று

[காலை சுமார் 10 மணி இருக்கும். கழாரில் காவிரிக் கரையில் மற்றொரு இடம். அணி செயயப் பெற்ற மேடையில் ஆதிமந்தியும் ஆட்டனத்தியும் நாட்டியம் ஆடுவதற்குத் தயாராக நிற்கிறார்கள். கரிகாற் பெருவளத்தான், வேண்மாள், அமைச்சர், சேனபதி, மற்றுமுள்ள பிரதானிகள், பெருங்குடி மக்கள் உரிய ஆசனங்களில் அமர்ந்திருக்கிறார்கள். திரை விலகியதும் நாட்டியம் தொடங்குகிறது. முதலில் ஆதிமந்தி பாட்டிற்கு அபிநயம் பிடித்து ஆடி வருகிருள்.]

(பாட்டு)

பல்லவி

குழலோசை கேட்குதடி—தோழீ
குழைகின்ற தென்றன் உள்ளம் —(குழலோசை)

[அனுபல்லவியைப் பாடிக்கொண்டே அத்தி ஆடி ஆடி வருகிறான்.]

அனுபல்லவி

அழகோங்கும் ராதா என் ஆசைமயில் காணேனே
தழைத் தோங்கும் வெண்ணிலவில் தனியிடத்தே
வாராயோ

[அத்தி ஆடி ஒருபுறம் நிற்க, ஆதிமந்தி பல்லவியைப் பாடி ஆடி வருகிருள். இருவரும் ஒருவரை ஒருவர் இன்னும் பார்க்கவில்லை. ஆதிமந்தி சரணத்தின் முதலிரண்டு வரிகளுக்கும் அபிநயம் பிடிக்கிருள்.]

சரணம்

ஆதிமந்தி : (பாட்டு)

மலர் வாயின் சிறுநகையால் மாநிலத்தைக் கவர்மாயன்
நிலவொளியில் வருவாரோ நிறை சுகமே தருவாரோ

[ஆதிமந்தி ஒருபுறம் நிற்கிறாள். அத்தி சரணத்தின் மற்ற இரு அடிகளையும் பாடி வருகிறான்.]

அத்தி : (பாட்டு)

கயல் போன்ற விழியுடையாள் கன்னி யென்றன் ராதாவின்
காதலுக்கோர் எல்லையுண்டோ கருதி யெனைத் தேடிவந்தாள்.

[பிறகு இருவருமாகச் சேர்ந்து பல்லவிக்கு அபிநயம் பிடித்துச் சேர்ந்து மகிழ்ச்சியோடு ஆடி நிற்கிறார்கள். அபிநயத்தைப் பாராட்டி அங்குக் கூடியிருந்த பிரமுகர்களும் மக்களும் கைதட்டி ஆரவாரம் செய்கிறார்கள்.]

ஒரு குரல் : வஞ்சி நாட்டு இளவரசர் ஆட்டனத்தி பல்லாண்டு வாழ்க!

[பல்லாண்டு வாழ்க, வாழ்க என்று எல்லோரும் உற்சாகத்தோடு முழங்குகிறார்கள்.]

வேறொரு குரல் : எங்கள் இளவரசியார் ஆதிமந்தி பல்லாண்டு வாழ்க!

[பல்லாண்டு வாழ்க, வாழ்க என்று மேலும் உற்சாகத்தோடு அனைவரும் முழங்குகிறார்கள். அத்தியும் ஆதிமந்தியும் மக்களுக்கு வணக்கம் செய்து தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள்.]

அத்தி : சோழநாட்டுப் பெருமக்களே, உங்கள் அனைவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். உங்கள் அன்பிற்கும் ஆசிமொழிகளுக்கும் நாங்கள் என்றும் கடமைப் பட்டிருக்கிறோம். உங்கள் அன்பு எங்களிடம் என்றும் நிலைத்திருக்கும்

சாத்தன் (மாறனைப் பின் தொடர்ந்து கொண்டே) டேய், அப்படிச் சொல்லி என்னை ஏமாத்த முடியாதுடா—வாடா.

[போகிறார்கள்.]

திரை

## காட்சி மூன்று

[...லை சுமார் 10 மணி இருக்கும். கழாரில் காவிரிக் ...ரையில் மற்றொரு இடம். அணி செயயப் ...ற மேடையில் ஆதிமந்தியும் ஆட்டனத்தி நாட்டியம் ஆடுவதற்குத் தயாராக நிற் ...கள். கரிகாற் பெருவளத்தான், வேண் ..., அமைச்சர், சேனாபதி, மற்றுமுள்ள ...ாணிகள், பெருங்குடி மக்கள் உரிய ஆசனங் ... அமர்ந்திருக்கிறார்கள். திரை விலகியதும் ...யம் தொடங்குகிறது. முதலில் ஆதி பாட்டிற்கு அபிநயம் பிடித்து ஆடு...றாள்.]

பல்லவி

...சை கேட்குதடி—தோழி
...தென்றன் உள்ளம் —(குழலோசை)

[...பப் பாடிக்கொண்டே அத்தி ஆடு...றான்.]

அநுபல்லவி

...ம் ராதா என் ஆசைமயில் காணேனே
...ங்கும் வெண்ணிலவில் தனியிடத்தே
வாராயோ

[...ஆடி ஒருபுறம் நிற்க, ஆதிமந்தி பல்லவி ...ப் பாடி ஆடி வருகிறாள். இருவரும் ஒரு...ர ஒருவர் இன்னும் பார்க்கவில்லை. ஆதி...தி சரணத்தின் முதலிரண்டு வரிகளுக்கும் ...நயம் பிடிக்கிறாள்.]

படியாக உங்களுக்கு இன்பப் பணி புரிவதையே எங்கள் வாழ்க்கையின் நோக்கமாகக் கொள்ளுவோம்.

[மறு முறையும் அத்தியும் ஆதியும் தலைவணங்குகிறார்கள். மக்கள் கைதட்டி ஆரவாரம் செய்கின்றனர்.]

மற்றொரு குரல் : எங்கள் சோழ வேந்தர் கலை வள்ளல் கரிகாற் பெருவளத்தான் பல்லாண்டு வாழ்க!

[அனைவரும் பல்லாண்டு வாழ்க என்று முழங்குகிறார்கள்.]

நான்காம் குரல் : எங்கள் அரசியார் வேண்மாள் பல்லாண்டு வாழ்க!

[மக்கள் அனைவரும் பல்லாண்டு வாழ்க வாழ்க என்று முழங்கி மகிழ்ச்சியோடு கைதட்டுகிறார்கள். கரிகாற் பெருவளத்தானும் வேண்மாளும் எழுந்து நின்று தலைவணங்குகிறார்கள்.]

கரிகாலன் : அமைச்சர் பிரதானிகளே, குடிமக்களே உங்கள் அனைவருடைய அன்பையும் இன்பத்தையும் கண்டு பெருமகிழ்ச்சி எய்துகிறோம். புதுப்புனல் விழாவை இவ்வளவு உற்சாகத்தோடு நீங்கள் கொண்டாடுவதைக் கண்டு எங்கள் உள்ளம் பூரிக்கின்றது. இந்தப் புதுப் புனல் போல உங்கள் இன்பமும் பல மடங்கு வெள்ளமாகப் பெருகி ஓங்குக! அவ்வாறு உங்கள் இன்பம் பெருக வேண்டுமென்பதே எங்கள் ஆசை. அதற்காக வேண்டிய பணி புரிவதையே நாங்கள் என்றும் எங்கள் வாழ்க்கை லட்சியமாகக் கொள்ளுவோம்.

[மக்கள் எழுந்து நின்று உற்சாகமாகக் கைதட்டி ஆரவாரம்செய்து அரசனை வணங்குகின்றனர்.]

கரிகாலன் : மக்களே, இனி அனைவரும் புதுப் புனல் ஆடி மகிழச் செல்லுவோம். அங்கே உங்கள் மாப்பிள்ளை ஆட்டனத்தி ஆற்று வெள்ளத்திலே பல அற்புதமான

ஆடல்களை யெல்லாம் செய்து காண்பிக்கப் போகிறாராம். அதையும் கண்டு மகிழுங்கள்.

[மக்கள் மகிழ்ச்சியோடு கலையத் தொடங்குகிறார்கள்.]

திரை

## காட்சி நான்கு

[காவிரி மணற்பரப்பிலே மற்றோரிடம். சாத்தனும் மாரனும் எதிர் எதிராக வேகமாக வந்து எதிர்பாராத விதமாக மறுபடியும் சந்திக்கின்றனர்.]

சாத்தன் : ஏண்டா டேய், நாட்டியக் கொட்டகைக்குவந்தா முறுக்குக் கொடுக்கிறேன்னு சொல்லிவிட்டு ஏமாத்திவிட்டா போனாய்? கூட்டத்திலே எப்படியோ நழுவீட்டுப் போயிட்டயே?

மாரன் : அடே, உன்னோடே இப்போப் பேச நேரமில்லே—காவிரியாற்றிலே சேரநாட்டு இளவரசர் என்னென்னமோ வித்தையெல்லாம் காட்டப்போறாராம்... அங்கே போகணும்.

[அவசரமாகப் போகிறான்.]

சாத்தன் (மாரனை வழிமறித்து) : ஆத்து வெள்ளத்திலயா?

மாரன் : ஆமாண்டா, வெள்ளத்திலே முழுகி முழுகி வித்தையெல்லாம் செய்வாராம்.

சாத்தன் (ஆச்சரியத்தோடு) : அப்பாடா, அதெப்படி முடியும்? அவருக்கு நீச்சல் தெரியுமாடா?

மாரன் : டேய், அவர் உன்னைப்போல வருசத்துக்கு ஒருக்கா ஆத்திலே முழுகுகிறவரல்ல...

சாத்தன் : டேய் மாரா, என்னைப் பத்தி மாத்திரம் நீ பேசாதே—உன்னுடைய சமாச்சாரத்தை எடுத்தா— பேச எடுக்கிற வாய்கூட நாறுமே...

மாரன் : அதுக்குத்தான் என்னுட முறுக்கு மேலே அத்தனை ஆசையோ?

சாத்தன் (சமாதானமாக) : மாரா, கோவிச்சுக் கிட்டயே? என்னமோ இன்னிக்கு எல்லாரும் சந்தோசமா இருக்கிறபோது நாமும் கொஞ்சம் தமாஸ் பண்ணக் கூடாதா? எங்கே இப்படி நாலு முறுக்குத் தள்ளு.

மாரன் : வாடா, ஆத்தங்கரையிலே போய்க் கொடுக்கிறேன் நேரமாச்சு...

சாத்தன் : ஏண்டா நீ ஆட்டனத்தி ஆட்டம் பார்க்கப் போறயா? இல்லாட்டி வியாபாரம் பண்ணப் போறயா?

மாரன் : நான் என்ன பண்ணினலும் உனக்கென்னடா? உனக்கு வேண்டியது வாய்க்கரிசி நாலு முறுக்குத் தாண்டா?

[போகிறன்.]

சாத்தன் (அவனைத் தொடர்ந்துகொண்டே): மாரா ஆத்துலே திடீர்னு இப்போ வெள்ளம் அதிகமா வருதாமே?

மாரன் : வந்தா அதைப்பற்றி உனக்கென்னடா கவலை? நீயா ஆத்துலே முழுகப்போறே?

சாத்தன் : இல்லேடா, அந்த சேரநாட்டு இள வரசர் வெள்ளத்திலே......

மாரன் : அதெல்லாம் அவர் சமாளிச்சுக்குவாருடா. அவுங்கெல்லாம் நீரிலியே குடியிருக்கிறவங்க. மீன் குஞ்சுக்கு நீச்சல் பளக்கவேணுமா?

சாத்தன் : நம்ம ஊரிலே மாத்திரம் தண்ணிக்குப் பஞ்சமாடா? இருந்தாலும் உனக்கு நீஞ்சத் தெரியுமா?

மாரன் : உனக்குத் தெரியுமாடா? பெரிய வாய் பேசறயே?

சாத்தன் : டேய் போடா? நம்ம சமாச்சாரத்தை ஏண்டா இளுக்கிறே?

[இரண்டு பேரும் போகிறார்கள்.]

திரை

## காட்சி ஐந்து

[காவிரி வெள்ளம் கண்ணுக்குக் காட்சியளிக்கிறது. அத்தி வெள்ளத்தில் புகுந்து ஆடப்போகிறான். ஆதிமந்தி பக்கத்திலே கரையில் நின்றுகொண்டிருக்கிறாள். மக்கள் பலர் கூடி நிற்கிறார்கள்.]

ஆதிமந்தி : காலையிலிருந்ததை விட இப்பொழுது வெள்ளம் அதிகக் கொந்தளிப்பாக இருக்கிறதே?

அத்தி : இப்படிக் கொந்தளிக்கிற வெள்ளத்திலே நீந்தி விளையாடுவதில்தான் எனக்கு அதிக ஆசை.

ஆதிமந்தி : வெள்ளப் பெருக்கென்றால் எனக்கென்னவோ எப்பொழுதும் பயந்தான்.

அத்தி : ஆதி, காட்டாற்று வெள்ளத்தைப்பற்றி என்னிடம் எத்தனையோ முறை நீ இழிவாகப் பேசியிருக்கிறாய். அதை நான் மறந்து விடவில்லை. ஆனால் இது உங்களுடைய காவிரிதானே?

ஆதிமந்தி : ஆமாம், எங்களுடைய காவிரித்தாய் தான். இருந்தாலும், தாயிடத்தில்கூட மரியாதையாக நடக்கத் தெரியவேணும்.

அத்தி : நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம், ஆதி. நான் எத்தனையோ பெரிய பெரிய பயங்கரமான வெள்

ளத்திலே நீந்தியிருக்கிறேன். இது எனக்குப் பெரிதல்ல— நான் புறப்படட்டுமா?

[நீரில் இறங்கத் தொடங்குகிருன்.]

ஆதிமந்தி (சற்றுக் கவலையோடு): எனது தாயும் தந்தையும் இங்கே வருவதாகச் சொன்ஞர்களே—அவர் கள் வரும் வரையில் சற்றுப் பொறுங்கள்.

அத்தி (சிரித்துக்கொண்டே): அவர்கள் வந்தா லும் கரையிலே உன்னேடுதானே இருக்கப்போகிருர்கள்? நீ வீணுகக் கவலைப்படாதே. அவர்கள் வந்த பிறகும் சில வித்தைகள் காட்டுகிறேன்.

[நீரில் இறங்குகிருன்.]

ஆதிமந்தி; சற்றுக் கரை அருகிலேயே விளையாடி ஞல் எல்லோரும் பார்க்க முடியும்.

அத்தி; சரி, ஆதி. அப்படியே விளையாடுகிறேன். நீ ஒரு பாட்டுப் பாடு. அது கேட்கிற தூரத்திலே நான் நீர் விளையாடுகிறேன்.

[ஆதிமந்தி பாடத் தொடங்குகிருள். அத்தி வெள்ளத்தினுள் பாய்கிருன். மக்கள் பலர் ஆச்சரியத்தோடு பார்த்து நிற்கிருர்கள்.]

ஆதிமந்தி: (பாட்டு)

பல்லவி

இணையில்லாத புகழ் நாடு
எங்கள் சோழ நாடு

அனுபல்லவி

துணையுடன் கூடி யன்னம் துயிலும் தன்பணை நாடு
சோழர் தம்கொடி யென்றும் ஓங்க நின்றிடும் நாடு—(இணை)

சரணம்

கங்கை போற்றிடும் எங்கள் காவிரிபாயும் நாடு
கழனி யெங்கணும் செந்நெல் கரும்பும் ஓங்கிடும் நாடு
பொங்கும் அன்பினர் நாடு போரில் பின்னிடா நாடு
எங்கும் கலைகள் ஓங்கும் ஏற்றம் கொண்டநல் நாடு
—(இணை)

*[அத்தி வெள்ளத்தில் புகுந்து பல வித்தைகள் புரிவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு மக்கள் பேசிக்கொள்கிறார்கள்.]*

*முதற் குரல் ;* சேரநாட்டு இளவரசர் நீரிலே குதித்து என்னென்ன அற்புதங்களெல்லாம் செய்கிறார்!

*இரண்டாம் குரல் :* அவரென்னவோ தண்ணீரிலேயே பிறந்தவரைப் போலல்லவா விளையாடுகிறார்!

*மூன்றும் குரல் :* பரத நாட்டியத்திலே அவருக்கு எத்தனை திறமை இருக்கிறதோ அத்தனை திறமை நீர் விளையாடுவதிலும் இருக்கிறதே!

*முதற் குரல் ;* அவர் நீரில் விளையாடுவதைப் பார்ப்பதற்கும் நமது இளவரசி ஆதிமந்தி பாடுவதைக் கேட்பதற்கும் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது!

*இரண்டாம் குரல் :* அவர்கள் இரண்டு பேருக்கும் அமைந்த் பொருத்தம்போல உலகத்திலே வேறு யாருக்கும் அமைய முடியாது.

*மூன்றும் குரல்;:* அவர்களுடைய காதலே காதல்...

*முதற்குரல் :* சோழ நாட்டு மக்களும் வஞ்சி நாட்டு மக்களும் அவர்கள் இரண்டு பேரையும் உள்ளன்போடு போற்றுகிறார்கள்.

*இரண்டாம் குரல் :* அதோ, ஆட்டனத்தி வெள்ளத்தை எதிர்த்து நீஞ்சுவதைப் பாருங்கள்.

மூன்றும் குரல் ; அவருடைய வலிமை மிகுந்த தோள்கள் எவ்வளவு அழகாகத் தோன்றுகின்றன!

முதற் குரல் : அவரது பரந்த மார்பைப் பாருங்கள்!

இரண்டாம் குரல் ; அதோ அவர் யானையைப் போல மேலெழுந்து மறுபடியும் நீரில் முழுகுகிருர்!

மூன்றும் குரல் : தம்பீ, வெள்ளம் அதிகமாக வரு கிறது போலிருக்கிறதே?

முதற் குரல் : ஆமாம், வெள்ளம் திடீரென்று கரை புரண்டு வருகிறதே? இதென்ன மாயமாக இருக் கிறது? ஆட்டனத்தி இன்னும் மேலே வரக்காணுமே?

இரண்டாம் குரல் (கவலையோடு) : இவ்வளவு நேர மாகத் தண்ணீருக்குள் முழுகி இருக்கிருரே, எப்படி மூச்சுப்பிடிக்க முடியும்?

மூன்றும் குரல்: இவ்வளவு நேரம் யாராலும் மூச்சுப் பிடிக்க முடியாதே? ஐயையோ...ஒரு வேளை...ஏதாவது ஆபத்து...

முதற் குரல்: உஸ்...சத்தமாய்ப் பேசாதே...இள வரசி காதில் பட்டால் பயந்து விடுவார்கள்...

[கலவரமான பேச்சிலே யாரும் பாட்டு முன்பே நின்றதை உணரவில்லை. ஆதிமந்தி எழுந்து முன்ஞல் வருகிருள். அவள் முகத்தில் கவலை படர்கிறது.]

ஆதிமந்தி: அவர் இத்தனை நேரமாக வெளியே தலை காட்டாமல் நீருக்குள் முழுகியிருக்கிருரே?

இரண்டாம் குரல்: இளவரசியாரே, மனங் கலங்கா தீர்கள்—அவர் வந்து விடுவார்.

மூன்றும் குரல்: நான் நீரில் குதித்துப் பார்க் கட்டுமா, தாயே?

ஆதிமந்தி : இவ்வளவு நேரம் மூச்சுத்தாங்க முடியுமா? இதென்ன விபரீதமாக இருக்கிறதே!

[விம்மிப் பெருமூச்சு விடுகிறாள். அவள் முகத்தில் திகில் குரூரக் காட்சியளிக்கிறது. பலர் ஆதிமந்தியைச் சூழ்ந்து வருகிறார்கள்.]

முதற் குரல் : நான் நமது வேந்தரிடம் ஓடி விஷயத்தைத் தெரிவிக்கிறேன்.........அம்மணி பயப்படாதீர்கள்.

[ஆதிமந்தி தேம்புங் குரல் கேட்கிறது. பலபேர் கவலையோடு பலவாறு பேசிக்கொள்ளுகிறார்கள்.]

ஆதிமந்தி : ஐயோ, ஆட்டனத்தி—அவர் எங்கே?

பல குரல்கள் : நான் முழுகிப் பார்க்கட்டுமா?

—நீ முழுகினால் மட்டும் போதுமா? ஓடக்காரர்களையும் வலைக்காரர்களையும் கூட்டி வாருங்கள்.

—இதோ நான் கூட்டி வருகிறேன்.

[ஒருவன் ஓடுகிறான்.]

—அந்தோ, அவர் எதற்காக இந்த வெள்ளத்தில் இப்படி விளையாடினார்?

—இதென்ன மாயமோ தெரியவில்லையே!

—அதோ அரசரும் அரசியும் வருகிறார்கள்—அவர்களுக்கு வழி விடுங்கள்.

[எல்லோரும் விலகி நிற்கிறார்கள். கரிகாற் பெருவளத்தானும் வேண்மாளும் முன்னால் வருகிறார்கள். அமைச்சர் பின்னாலே வருகிறார்.]

கரிகாலன் : ஓடக்காரர்கள் எங்கே? உடனே வெள்ளத்தில் ஓடங்களைவிட்டுத் தேடச் சொல்லுங்கள். அமைச்சரே, ஒவ்வொரு மடுவையும், சுனையையும் நன்றாக அதிவேகமாகப் பார்க்க வேண்டும்.

அமைச்சர் : இதோ எல்லாம் ஏற்பாடு செய்கிறேன்...ஆதிமந்தியைக் கவனித்துக் கொள்ளுங்கள்.

[அமைச்சர் வேகமாகப் போகிறார்.]

ஆதிமந்தி (கிலிபிடித்த குரலில்): ஆட்டனத்தி வெள்ளத்திலா போய்விட்டீர்?...இல்லை இல்லை...காவிரித் தாயே எனது கணவனை என்ன செய்துவிட்டாய்? அவரை எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய்?...ஐயோ ஆட்டனத்தி...

[அலறி மூர்ச்சையுற்று விழுகிறாள். வேண்மாள் முன்னால் வந்து மகளை அணுகுகிறாள்.]

கரிகாலன்: வேண்மாள், ஆதிமந்தி மூர்ச்சையடைந்துவிட்டாள்—அவளை நன்றாகக் கவனித்துக் கொள்...யாரது அங்கே? அரண்மனை மருத்துவரை உடனேஅழைத்து வாருங்கள்.

[இரண்டு சேவகர்கள் ஓடுகிறார்கள்.]

வேண்மாள் (விம்மிக்கொண்டு): ஐயோ, நான் என்ன செய்வேன்···ஆதிமந்தியின் நிலைமை......

கரிகாலன்: வேண்மாள், நீ மன உறுதியோடிருக்க வேண்டும். நீ மனங் கலங்கினால் ஆதிமந்தியின் நிலைமை இன்னும் மோசமாகிவிடும்...நான் எப்படியும் ஆட்டனத்தியைத் தேடிக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்கிறேன். நானே நேரில் செல்லுகிறேன்.

[வேகமாகச் செல்லுகிறான்.]

வேண்மாள்: தோழிகளே, ஆதிமந்தியின் முகத்தில் குளிர்ந்த நீரைத் தெளித்து விசிறி கொண்டு வீசுங்கள்.

[விம்மிப் பெருமூச்சு விடுகிறாள். அவள் கண்களில் நீர் பெருகுகிறது. அரண்மனை மருத்துவர்கள் வருகிறார்கள்.]

தோழிகளில் ஒருத்தி: இதோ மருத்துவர்கள் வந்து விட்டார்கள்—அம்மணி, பயப்படாதீர்கள்.

[மருத்துவர்கள் ஆதிமந்திக்கு சிகிச்சை செய்யத் தொடங்குகிறார்கள். மக்கள் விலகி நிற்கிறார்கள். எல்லோர் முகத்திலும் துக்கம் குடிகொண்டிருக்கிறது.]

திரை

## காட்சி ஆறு

[காவிரிக் கரையிலே மற்ெருரு பக்கம்; மக்கள் நடமாட்டமே இப்பொழுதில்லை; மாரன் தனது கூடையைக் கீழே வைத்துவிட்டுக் கவலையோடு உட்கார்ந்திருக்கிருன். சாத்தன் எதிரே வருகிருன்.]

மாரன் : சாத்தா, எங்கே திரும்பிக்கூடப் பார்க் காமல் போருயே...?

சாத்தன்: பார்த்து என்ன பண்ணரது? காலையிலே உன் முகத்திலே முளிச்சுத்தான் இன்னைக்கு இப்படி யாச்சு.

மாரன் : அட வா, முறுக்கு வேணும்னு அப்போப் பிடிச்சுக் கேட்டாயே—இந்தா வேணும்கிறதை எடுத் துக்கோ—வா. காசும் வாண்டா, ஒண்ணும் வேண்டாம்.

சாத்தன் : உன் முறுக்கைக் கொண்டுபோய் அந்தக் காவிரி வெள்ளத்திலே கொட்டு. அப்பக்கூட அதுக்குப் பசி யடங்காது—எனக்கொன்னும் வேண்டாம்.

மாரன் : ஏண்டா, நீயும் பார்த்தியே—அவர் நல்லாத்தானே நீந்தி விளையாடினர்?

சாத்தன் : ஆமாம்—நல்லாத்தான் நீந்தி ஆட்ட மெல்லாங் காட்டினர். இருந்தாலும் இந்த வெள்ளம் எப்படியோ வஞ்சனை செய்துவிட்டதே...

மாரன் (எழுந்து சாத்தன் அருகே சென்று) : ஓடக் காரரெல்லாம் போனுங்களே, ஒன்றும் கிடைக்கவே இல்லையா?

சாத்தன் : வலையிலே என்னென்னவோ கிடைச்சுது. ஒரு வலையிலே ஒரு வாழை மரம் குலையோடு வந்தது. மட்டை வந்தது. மரம் வந்தது—அதெல்லாம் வந்து என்னத்துக்காச்சு? தேடின பொருள்தான் கிடைக்கவே இல்லை.

மாரன் (விசனத்தோடு) : இந்த வருசம் விளா இப்படியா முடியவேணும்? சந்தோசமா திரிஞ்ச ஜனங் களை இப்போ ஒரு குஞ்சைக் காணோம். எல்லாரும் அழுது கிடக்கிறார்கள்.

சாத்தன் : ஏண்டா, உனக்கு வியாபாரம் போச் சேன்னு பார்க்கிறயா?

மாரன் : அடே போடா—இந்த வியாபாரம் யாருக்கு வேணும்? நம்ம இளவரசிக்கு இப்படி வந்துதே —எனக்கு நெஞ்சமெல்லாம் துடிக்குது.

சாத்தன் : சேர நாட்டு சின்னராசா ஆட்டனத்தி தான் அவங்களுக்கு உயிர்—இனி எப்படித்தான் பிழைக்கப் போறாங்களோ?

மாரன் : அதுதாண்டா எனக்கும் ஒரே மலைப்பா இருக்குது. இத்தனை ஆட்டமும் பாட்டமும்—இத்தனை அழகும் தெய்வத்துக்கே பொறுக்கலே.

சாத்தன் : தெய்வமா? தெய்வத்துக்கு கண்ணி ருந்தா இப்படி நடக்குமா?

மாரன் : வாடா, போய் விசாரிச்சுப் பார்ப்போம். ஒருவேளை எல்லாம் சுகமா முடிஞ்சாலும் முடியும். வா போகலாம்.

[புறப்பட்டுப் போகிறான்.]

சாத்தன் : மாரா, முறுக்குக் கூடையை மறந் திட்டியா?

மாரன் : அடே அது கிடக்குது வாடா. நீ சொன் னைப்படி அதை இந்த வெள்ளத்து வாயில்தான் போடணும். வா போகலாம்.

[இருவரும் போகிறார்கள். முறுக்குக் கூடை கவனிப்பாரற்றுக் கிடக்கிறது.]

திரை

# மூன்றும் அங்கம்

## காட்சி ஒன்று

[கழாரிலே சோழ அரசரின் சிறிய அரண்மனை. அந்தப்புரத்திலே கரிகாற் பெருவளத்தானும் வேண்மாளும் கவலையோடு பேசிக்கொண்டிருக்கிறார்கள். மாலை சுமார் 5 மணி இருக்கும்.]

கரிகாலன் (வருத்தத்தோடு): இப்படி நேருமென்று யார் கண்டார்கள்? ஆட்டனத்தியோ நீஞ்சுவதிலும் வெள்ளத்தை எதிர்த்துச் செல்லுவதிலும் மிகுந்த திறமை வாய்ந்தவர். அவரைக்கூட இன்று திடீரென்று வந்த வெள்ளம் எப்படியோ வஞ்சித்துவிட்டது.

வேண்மாள் (தேம்பிய குரலில்): என் மகள் பயித்தியம் பிடித்தவள்போல் அவர் பெயரையே கூவிக்கொண்டு காவிரியின் கரையோரமாக அலைந்துகொண்டிருக்கிறாளே—வஞ்சிநாட்டு இளவரசரைப் பறிகொடுத்ததோடு, என் மகளையும் இப்படி அலங்கோலமாக புத்தி சுவாதீனமில்லாத நிலையில் தவிக்கவிட வேண்டியதாயிற்றே!

[விம்மி யழுகிறாள்.]

கரிகாலன்: என்ன செய்யலாம்? காவிரிக் கரையோரமாக ஆதிமந்தியைத் தன் விருப்பம் போல் போக விடாமல் தடுத்து அரண்மனைக்கு அழைத்து வந்தால் அவளுடைய நிலைமை இன்னும் மோசமாகி விடுமென்று மருத்துவர்கள் கருதுகிறார்கள். அவளுடைய உள்ளம் பேதலிக்கிற நிலையிலே அவள் இன்னும் ஆட்டனத்தி உயிரோடிருப்பதாக எண்ணிக்கொண்டிருக்கிறாள்.

வேண்மாள் (விம்மிக்கொண்டு): அவரை இனிமேல் உயிரோடு காணமுடியாதா? எனது செல்வ மகள் இனிமேல் கணவனை இழந்தவள்தானா?

[அலறி நிற்கிருள் கரிகாலன் அவள் அருகில் சென்று ஆறுதல் கூற முயல்கிருன்.]

கரிகாலன் : இந்தப் பதினறு நாழிகையாக ஓடக்காரர்களும் வேலைக்காரர்களும் புனல் விளையாட்டு நடந்த இடத்திலிருந்து கிழே ஐந்து நாழிகை தூரத்திற்குக் காவிரியிலே பார்க்காத இடமில்லை. அரிப்புக்காரர்கள் வலைவீசிப் பார்க்காத மடுவுமில்லை; குழியுமில்லை. இப்பொழுது அவர்கள் இன்னும் கீழே தேடிக் கொண்டிருக்கிருர்கள்.

வேண்மாள் ; இவ்வளவு நேரமாகக் கண்டுபிடிக்க முடியாவிட்டால் ஆட்டனத்தியை இனி எப்படி உயிரோடு பார்க்கப் போகிறேம்?

கரிகாலன் : வேண்மாள், விதி எப்படியோ கொடூரமாக நம்மை வஞ்சித்துவிட்டது! ஆட்டனத்தியைக் கவர்ந்து சென்றதுமல்லாமல் நமது மகளின் புத்தியையுமல்லவா கலங்கச் செய்துவிட்டது? அவளை எப்படியாவது குணமடையச் செய்தால் அவளாவது நமக்கு ஓரளவு ஆறுதல் தருவாள்.

வேண்மாள் : கணவனை இழந்த கோலத்திலே அவளைக் கண்டு எப்படித்தான் நாம் ஆறுதல் கொள்ள முடியும்?

[விம்மி யழுகிருள்.]

கரிகாலன் : அவளை இந்த நிலையில் பார்க்கவும் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனல், அவள் மூளை முற்றிலும் குழம்பிப்போய் முழுப் பைத்திய நிலையிலே அவளைப் பார்க்கவேண்டி ஏற்பட்டால் என் உள்ளமே வெடித்துப் போகும்.

வேண்மாள் (கரிகாலன் கண் கலங்குவதைப் பார்த்து): நீங்களே இப்படிக் கூறிஞல் நான் என்ன

செய்வேன்? ஒருவேளை ஆதிமந்தி நினைத்துக்கொண்டிருக்கிறதைப் போல அவர் இன்னும் உயிரோடிருந்தால்......

கரிகாலன் : வேண்மாள், உயிரோடிருக்க வேண்டுமென்பதுதான் எல்லோருடைய ஆசையும்......ஆனால்... தண்ணீரில் முழுகியவர்களைப் பதினாறு நாழிகைவரை கண்டுபிடிக்க முடியாமல் போன பிறகு......

[அமைச்சர் உள்ளே வந்து வணங்கி நிற்கிறார்.]

வேண்மாள் (ஆவலோடு) : அமைச்சரே, ஏதாவது சேதியுண்டா?

அமைச்சர் (முகவாட்டத்தோடு) : அம்மணி, அப்படி நல்ல சேதி கொண்டு வருகிற பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. எல்லா முயற்சிகளும் செய்து பார்த்து விட்டோம்...

கரிகாலன் : ஆதிமந்தி இப்பொழுது எங்கே இருக்கிறாள்?

அமைச்சர் : கழார்ப் பட்டினத்திலிருந்து காவிரிக் கரையோரமாகப் புறப்பட்ட இளவரசி இப்பொழுது எட்டு நாழிகை தூரம் நடந்து சென்றுவிட்டார்கள். 'காவிரித் தாயே என் கணவனைக்கொடு' என்று புலம்பிக் கொண்டே போகிறார்கள்.

வேண்மாள் : கல்லிலும் முள்ளிலுமாக அவள் எப்படித்தான் நடந்து செல்லுகிறாளோ? அமைச்சரே, அவளுடைய மனநிலை எப்படியிருக்கிறது?

அமைச்சர் : ஆதிமந்தியார் நினைவெல்லாம் அவருடைய கணவனைப் பற்றியே இருக்கிறது. அவர் எங்கு செல்லுகிறார்கள் என்ன செய்கிறார்கள் என்ற நினைவே இல்லை. மனம் பேதலித்துத்தான் தத்தளிக்கிறது.

வேண்மாள் : அவளை எப்படியாவது இங்கே அழைத்து வந்துவிட முடியாதா?

அமைச்சர் ; அவருடைய போக்கிலே விட்டால் தான் உள்ளத்திலே மெதுவாக அமைதி உண்டாகலாம் என்று மருத்துவர்கள் எண்ணுகிறார்கள். இங்கே அவர்களை அழைத்து வந்தால் அவர்களுக்கிருக்கும் ஒரு நம்பிக்கையும் குலைந்துபோய் அவர்கள் மனம் நிரந்தரமாக இருளடைந்து போய்விடும்.

வேண்மாள் : இன்னும் கணவனைக் காணலாம் என்று அவள் நம்புகிறாளா?

அமைச்சர் : ஆமாம், காவிரித்தாய் ஆட்டனத்தியை விருந்துக்கு அழைத்துச் சென்றிருப்பதாகவும் அவரை விரைவிலே திருப்பி அனுப்பி விடுவாளென்றும் நினைத்துக் கொண்டிருக்கிறார்.

கரிகாலன் : அமைச்சரே, ஆதிமந்தியின் சௌகரியத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் ஒழுங்காக இருக்கிறதா?

அமைச்சர் : எல்லா வசதிகளும் செய்து வைத்திருக்கிறோம். அவர் விரும்புகிற மலர்களையெல்லாம் பெண்கள் பலர் கொண்டுவந்து தருகிறார்கள். கணவனை எதிர்கொண்டழைப்பதற்காகத் தம்மைப் பூக்களாலும் தழைகளினாலும் இளவரசி அலங்காரம் செய்து கொள்ளுகிறார்கள்.

வேண்மாள் : நான் அவளோடு கூடவே செல்லட்டுமா? கண்ணிலாவது அவளைப் பார்த்துக் கொண்டிருந்தால் என் மனம் ஓரளவு நிம்மதியாக இருக்கும்.

அமைச்சர் : ஆதிமந்தி இன்றிருக்கும் நிலையிலே யாரும் அவருக்குப் பக்கத்தில் அணுகாதிருப்பதுதான் நல்லது. உங்களைக் கண்டால் அவர் உள்ளம் திடீரென்று கொந்தளித்துவிடும். தோழிப் பெண்களைக்கூடக் கூடுமானவரை அருகில் சொல்லாமலிருக்கும்படி மருத்துவர்

கள் கூறுகிறார்கள், யாரைப் பார்த்தாலும் ஆட்டனத்தி எங்கே என்று கேட்பார்கள்.

கரிகாலன் : மருத்துவர்கள் கூறுவது சரியென்று தான் எனக்கும் தோன்றுகிறது. ஆதிமந்தி தானாகவே தனது உள்ளத்திலே இருக்கும் துக்கத்தை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படுத்தி ஆறுதல் பெற வேண்டும். நாம் பக்கத்திலிருந்தால் அவளுக்கு நன்மை யொன்றும் ஏற்படாது. நமது துக்கமும் சேர்ந்து அவளை வாட்டத் தொடங்கிவிடும்.

அமைச்சர் : அம்மணி, உங்களைக் கண்டால் உடனே ஆட்டனத்தி எங்கே என்று கேட்பார்கள். உங்களால் அவர்களுடைய சோகப் பார்வையைத் தாங்கவே முடியாது.

கரிகாலன் : அமைச்சரே, நீங்களே நேரிலிருந்து அவளுக்கு வேண்டிய சௌகரியங்களைக் கவனித்துக் கொள்ளுங்கள். நூறு தோழிப் பெண்களை இரவும் பகலும் மாறிமாறி வேலை செய்யும்படி ஏற்பாடு செய்யுங்கள். வழி நெடுக மனதுக்கு மகிழ்ச்சி தரும் நிகழ்ச்சிகளே இருக்குமாறும் பார்த்துக் கொள்ளுங்கள்.

அமைச்சர் : அரசே, தாங்கள் கூறியவாறே எல்லாம் ஏற்பாடு செய்கிறேன். தாங்கள் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. ஆதிமந்தியை எனது கண்ணிமை போலக் காத்து வருவது என்னுடைய பொறுப்பு.

வேண்மாள் : அவள் கடற்கரை வரையிலும் இப் படிப் போவாளோ?

அமைச்சர் . ஆமாம் தாயே, அப்படித்தான் தோன்றுகிறது.

வேண்மாள் : காவிரிப் பூம்பட்டினத்திலே காவிரி கடலோடு கலக்குமிடம் சென்ற பிறகு அவள் என்ன செய்வாளோ?

[அலறித் தேம்புகிருள்.]

கரிகாலன் : வேண்மாள், நீ அதைரியப் படாதே. கடற்கரைக்குப் போவதற்குள்ளே அவள் மனம் ஒருவாறு சாந்தி யடையுமென்று நம்புவோம்......அமைச்சரே, நீங்கள் உடனே புறப்படுங்கள். எங்கள் உயிர் உங்கள் வசத்திலே இருக்கிறது.

[அமைச்சர் வணங்கிப் புறப்படுகிருர்.]

திரை

## காட்சி இரண்டு

[காவிரியின் கரையிலே மரங்களும் செடிகளும் அடர்ந்த ஓரிடம். ஆற்றங்கரையிலே கிடைக்கும் மலர்களையெல்லாம் கொத்துக் கொத்தாக அணிந்துகொண்டு சோகமே வடிவாக மனத் தெளிவில்லாத நிலையில் ஆதிமந்தி வருகிருள். காவிரியைப் பார்த்துப் பாடுகிருள். மாலை 6 மணியிருக்கும். பொழுது சாய்ந்து இருள் கூடுகின்ற நேரம்.]

ஆதிமந்தி: (பாட்டு)

பல்லவி

காவிரித் தாயே—என்
கணவனைத் தருவாய் (காவிரி)

அனுபல்லவி

நீர் விளையாடிய மருகனை அன்போடு
நீயழைத்துக் கொண்டாயே எனை மறந்தாயோ (காவிரி)

சரணம்

மாந்தருக் கெல்லாம் உயிர் வழங்கிடும் தாயே நீயுன்
மருகனும் என் உயிரையே வாங்கிடுவாயோ
வேந்தராம் சோழர் குலத்தையே வாழ்விப்பாய் என்
வேதனை நீயுணராயோ நானுமுன் மகள் அல்லவோ (காவிரி)

*[கால்கள் தடுமாற உலக நினைவே இல்லாமல் ஆதி மத்தி ஆற்ரோரத்திலேயே செல்லுகிருள்.]*

திரை

## காட்சி மூன்று

*[காவிரிக் கரையில் வேரோர் இடம். மூன்று பெண்கள் அழகாக அணிந்தும் உடுத்தும் நிற்கிருர்கள். காலை நேரம். ஏழுமணியிருக்கும்.]*

*முதற் பெண்:* என்னமோ அம்மா, இந்தக் காவிரி நதிக்கு இத்தனை கல்மனசு இருக்கக் கூடாது. நமது இளவரசியும் வஞ்சிநாட்டு இளவரசர் ஆட்டனத்தியும் எத்தனை உயிருக்குயிராக இருந்தார்கள்! அதைக் காண இந்த நதிக்குப் பொறுக்கவில்லையே?

*இரண்டாம் பெண்:* ஆதிமந்தியினுடைய அழுகையைக் கேட்டால் கல்லும் கரைந்து போகும்.

*மூன்ரும் பெண்:* இளவரசி நேற்று இரவு முழுவதும் காவிரிக் கரையிலே இருந்து கொண்டு ஆட்டனத்தி வாராயோ வாராயோ என்று பாடிக் கதறிக்கொண்டே இருந்தார்களாம்

*இரண்டாம் பெண்:* சேரநாட்டு இளவரசர் வெள்ளத்திலே மறைந்தது எப்போ?

*மூன்ரும் பெண்:* நேற்று மத்தியானம்—உச்சி வேளைக்குக் கொஞ்சம் முன்னதாக.

[மேலும் ஆறு பெண்கள் வந்து சேருகிறார்கள். எல்லோரும் சேர்ந்து பாடிக்கொண்டு கைதட்டி ஆடுகிறார்கள்.]

எல்லோரும்: (பாட்டு)

சோலையிலே மலரெடுத்துச் சாமிக்குநாம் போட்டோம்
துன்பமெலாம் போயொழியும் ஏனினிமேல் வாட்டம்
காலையிலே எழுந்தவுடன் கையெடுத்துப் பணிந்தோம்
கடவுளருள் காத்திடுமென் றுள்ளமிகத் துணிந்தோம்

ஆட்சிமுறை நீதிமுறை எல்லாம் சோழன் பண்பாம்
அவனிருக்கும் போதெமக்கே வாழ்விலேது துன்பம்
காட்சியிலே கலைகளிலே ஓங்குமுயர் நாடு
காவிரியின் கருணையினால் வளங்கொழிக்கும் நாடு

மேழிச்செல்வம் ஓங்கியும் குடிகள் இன்பம் ஓங்கியும்
மேதினியின் திலகமதாய் ஒளிரும்சோழ நாடிதே
வாழியவோ வாழியவோ கடவுளருள் வாழி
வாழியெங்கள் கரிகால வளவன் என்றும் வாழியே!

[குரவைக்கூத்து முடியும் தருணத்திலே ஆதிமந்தி விநோதமாக உடுத்தும் அணிந்தும் வருகிறாள். எல்லோரும் கடலை விடுத்து அவளைப் பரிவோடு பார்க்கிறார்கள்.]

ஆதிமந்தி: அம்மா, தோழிகளே, நீங்களெல்லாம் எவ்வளவு அழகாக ஆடுகிறீர்கள்? உங்கள் ஆட்டத்தைக் கண்டால் வஞ்சிநாட்டு இளவரசர் எத்தனை சந்தோஷப் படுவார்! அவரை நீங்கள் இங்கே வரும்படி கூப்பிட வேண்டாமா?

முதற் பெண் (மெதுவாக): இளவரசி, நாங்களெல் லாம் அவரை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருக் கிறோம்.

ஆதிமந்தி: நீங்கள் எதிர்பார்த்து என்ன செய்வது? காவிரித்தாய் அவரை விட்டால்தானே?

[அவள் கண்களில் நீர் ததும்புகிறது.]

இரண்டாம் பெண்: அம்மணி, அவர் சீக்கிரம் வந்து விடுவார்—கலங்காதீர்கள்.

ஆதிமந்தி: அவர் எங்கே சென்ருரோ? இந்த வழியாகத்தான் போயிருப்பார்—நீங்கள் எல்லாம் என்னோடு வருகிறீர்களா? எல்லோருமாகப் போய்த் தேடுவோம்.

மூன்ரும் பெண்: நாங்கள் எல்லோரும் வருகிருேம். அதற்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிருேம்.

ஆதிமந்தி தோழிகளே, நீங்கள் அவரை இந்த வழியிலே பார்க்கவில்லையா?

முதற் பெண் (தடுமாற்றத்துடன்): பார்த்தோ... இல்லை...நாங்கள் அந்தச் சமயத்திலே இங்கே வர முடியாமல் போய்விட்டது.

ஆதிமந்தி: அதோ அந்தப் பறவைகள் எல்லாம் உங்களிடம் சொல்லியிருக்குமே? அவையெல்லாம் ஆட்டனத்தியின் ஆடலைப் பார்த்துப் பார்த்து ஆனந்தப் படுமே—உங்களிடம் அவை சொல்லவில்லையா? நான் கேட்கட்டுமா?

(பாட்டு)

பல்லவி

எங்கு சென்ருய் ஆட்டனத்தீ—உள்ளம்
ஏங்குகின்றேன் அறியாயோ? (எங்கு)

அநுபல்லவி

பொங்கிவரும் வெள்ளமதில் புகுந்தாடும் திறலோனே
திங்களணி ஈசன்தரும் திருமகன்போல் எழிலோனே
(எங்கு)

சரணம்

குயிலினங்காள் காணீரோ கொக்குகளே காணீரோ
கொஞ்சுமொழி மைனுவே கொழுநனைநீர் காணீரோ
மயிலினங்காள் காணீரோ வளர்கடம்பே காணுயோ
மணல்மேடே காணுயோ வாத்துகளே காணீரோ (எங்கு)

*[பாட்டைப் பாடிக்கொண்டே ஆதிமந்தி போகிருள். அந்தப் பெண்களைப் பற்றிய நினைவு அவளுக்கு இப்பொழுதில்லை. அவர்கள் விசனத்தோடு ஆதிமந்தியைப் பார்த்துக்கொண்டு நிற்கிருர்கள்.]*

திரை

## காட்சி நான்கு

*[காவிரிப்பூம்பட்டினத்திற்கு அருகிலோ காவிரிக் கரையிலோ தனியாக அமைந்துள்ள ஒரு வீடு. உள்ளே ஒரு விசாலமான அறையில் இருந்து மருதியும் பொன்னியும் பேசிக்கொண்டிருக்கிருர்கள். மருதி இளமையின் அழகு பொங்க விளங்கும் பாண்மகள். பொன்னி அவளுடைய தோழி. நர்ட்டியத்திலும் பாட்டிலும் ஈடுபட்ட பாண்மகள் மருதி என்பதற்கு அறிகுறியாக அந்த அறையிலே பலவகை இசைக் கருவிகளும் மற்றப் பொருள்களும் காட்சி அளிக்கின்றன. காலை சுமார் எட்டு மணியிருக்கும்.]*

*பொன்னி:* மருதீ, காவிரிக்காவது போய்விட்டு வருவோமா?

*மருதி:* என்ன பொன்னீ. காலையில் எழுந்தவுடனே உனக்குக் காவிரிமேலே நினைப்பு வந்துட்டதா? ஊருக்

கெல்லாம் புனல் விளையாட்டு விழா நேற்று நடந்தது—உனக்கு இன்றைக்கு விழாவா?

பொன்னி: காவிரியிலே புனல் விளையாட்டு நமக்குத் தினமுந்தான் நடக்கிறது. இப்போ நான் நீர்விளையாடக் கூப்பிடவில்லை. காவிரியிலே போய் நாலு நண்டுக்குட்டி பிடித்துக்கொண்டு வரலாமென்று கூப்பிட்டேன்.

மருதி (சிரித்துக் கொண்டு): அதென்னத்திற்கு நண்டுக்குட்டி?

பொன்னி: விளையாடுவதற்கு வேணும் மருதி.

மருதி: விளையாடுவதற்கு நண்டுக்குட்டியா? உனக்கென்ன பயித்தியம் பிடித்துவிட்டதா என்ன?

பொன்னி: ஆமாம், மருதி—பயித்தியந்தான். யார் முகத்தையும் பார்க்காமல் இப்படி இங்கே இன்னும் கொஞ்சம் நாட்களுக்கு அடைபட்டுக்கிடந்தால் எனக்குப் பயித்தியமே பிடித்துவிடும்.

மருதி: ஏன் பொன்னி, நீ யார் முகத்தையும் பார்க்கிறதில்லையென்று பொய்தானே சொல்லுகிறாய்? நீ என் முகத்தைப் பார்க்கவில்லையா?

பொன்னி: அந்த அளவிற்காவது தயவு வைத்தாயே அது போதும்—இந்தப் பதினைந்து நாளாக உன்னைத் தவிர வேறு யாரையாவது பார்க்க வகையுண்டா?

மருதி: ஏன், என் முகத்தைப் பார்க்கிறது உனக்குப் பிடிக்கவில்லையா?

பொன்னி: நான் என்ன உனக்குக் காதலனா? காதலனாக இருந்தால் உன் முகத்தையே ஆயுள் முடிகிற வரையிலும் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

மருதி: ஏன் நீயே எனக்குக் காதலனாக இருந்துவிடேன்?

பொன்னி: ஆமாம் ஆமாம்—இப்படியே யாரையும் சந்திக்காமல் இந்த இடத்திலே நாம் அடைபட்டுக் கிடந்தால் நான் உனக்குக் காதலனாக வேண்டியதுதான்—நீ எனக்குக் காதலனாக வேண்டியதுதான்.

மருதி (சிரித்துக் கொண்டு): பொன்னீ, இன்னும் ஒரு பதினைந்து நாள்—அதற்குள் என் தந்தை பாண்டிய நாட்டிலிருந்து திரும்பிவந்து விடுவார்கள். பிறகு நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம். காவிரிப்பூம்பட்டினத்தையே தினமும் நாலுதடவை சுற்றிவா—எனக்குச் சம்மதந்தான்.

பொன்னி: உன் தந்தை இங்கே இல்லாததால் நாம் யாரையும் பார்க்காமல் இங்கே ஏகாந்த வாசம் செய்ய வேணுமென்று கட்டாயமா என்ன?—நாட்டிலே என்ன நடக்கிறதென்றுகூடத் தெரிந்துகொள்ள வழியில்லையே?

மருதி: சோழ நாடெல்லாம் நீ தெரிந்துகொள்ளாமலேயே சுகமாகத்தான் இருக்கிறது, பயப்படாதே. நமது அரசர் கரிகாற் பெருவளத்தானுக்கு நீ அமைச்சராக ஆகிறபோது நாட்டு விவகாரத்தை யெல்லாம் நாள் தவறாமல் தெரிந்து கொள்ளலாம்.

பொன்னி: ஆமாம், கரிகாற் பெருவளத்தானுக்கு என்னைவிட்டால் அமைச்சராக வருவதற்கு உலகந் தெரியாத மண்டுகள் வேறு யார் கிடைக்கப்போகிறார்கள்? இந்தப் பதினைந்து நாட்களாக யாரையுமே சந்திக்காமலிருப்பது எனக்கு என்னவோ போலிருக்கிறதென்று சொல்ல வந்தால் இந்த நாட்டியராணி எனக்கு அமைச்சர் வேலை வாங்கித்தரப் போகிறாளாம்.

மருதி: பொன்னீ, யாருடனும் சம்பந்தமில்லாமல் காவிரிக்கரையிலே இப்படித் தனி மாளிகையிலே இருப்பது எனக்கு எவ்வளவோ ஆனந்தமாக இருக்கும்.

பொன்னி: நானும் இல்லாவிட்டால் இன்னும் ஆனந்தமாக இருக்கும். எப்பொழுது பார்த்தாலும் உன் விருப்பம்போல் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டுமே இருக்கலாம்.

மருதி: நீ இல்லாவிட்டால் எனது ஆடலைப் பார்த்து அதைப்பற்றி அபிப்பிராயம் சொல்லுவதற்கு வேறு யாரிருக்கிறார்கள்?

பொன்னி: அதற்காக இப்படி என்னைச் சிறையில் போட்டு வைக்கக்கூடாது? தினமும் கொஞ்ச நேரமாவது விடுதலை கொடுக்கக் கூடாதா?

மருதி: நீ காவிரிப்பூம் பட்டினத்திற்குள்ளே போனால் அப்புறம் எப்பொழுது திரும்புவாய் என்று சொல்ல முடியுமா? வம்பளப்பதற்கு உனக்குத்தான் அங்கே ஆயிரம்பேர் காத்துக்கொண்டிருப்பார்களே?

பொன்னி: அதற்குத்தான் காவிரிக்காவது போய் நண்டுக்குட்டி நாலுபிடித்து வரலாமென்று கூப்பிடு கிறேன். அந்த நண்டுகளோடாவது கொஞ்ச நேரம் பொழுது போக்கலாமல்லவா?

மருதி: பொன்னி, என் தந்தை வந்தவுடனே வஞ்சி நாட்டுக்குப் புறப்பட ஆயத்தமாக இருக்க வேண்டாமா? வஞ்சிநாட்டு இளவரசர் ஆட்டனத்தி நாட்டியத்திலே இணையில்லாதவர்—அவர் முன்னிலையிலே நான் ஆடி அவருடைய பாராட்டைப் பெற வேண்டும். அதுதான் என்னுடைய வாழ்க்கையிலே எனக்கு ஒரே ஆசை.

பொன்னி: சரி மருதி, உன் விருப்பம் போலவே செய். இரவும்பகலுமாக ஆடிப் பயிற்சி செய்து எப்படியோ ஆட்டனத்தியிடம் பரிசு பெற்று வந்தால்போதும். அதற்காக இந்த அஞ்ஞாத வாசத்தையும் நான் பொறுத்துக் கொள்ளுகிறேன்.

மருதி (சிரித்துக் கொண்டு): பொன்னித்தாயே, உன்னுடைய இந்தப் பெரிய தியாகத்திற்காக நான் என்றும் நன்றியோடிருப்பேன்.

பொன்னி: கரிகாற் பெருவளத்தானுடைய சபையிலே அமைச்சர் வேலை வாங்கிக் கொடுப்பதை மட்டும் மறந்துவிடாதே, வெறும் வாய் வார்த்தையால் நன்றியைத் தெரிவித்துவிட்டு எல்லோரையும்போல ஏமாற்றி விடாதே!

[இருவரும் சிரிக்கிறார்கள்.]

மருதி: முதலில் இப்போ உனக்கு நண்டுக்குட்டி பிடித்துக்கொடுக்கிறேன், வா. அமைச்சர் வேலையைப் பிறகு பார்த்துக்கொள்ளுவோம்.

பொன்னி: அப்பா, அதற்காவது கருணைவந்ததே. கொஞ்ச நேரத்திற்காவது உனது ஆடலையும் பாடலையும் நிறுத்தி வைக்க மனசுவந்ததே, அதே போதும்.

மருதி (போய்க்கொண்டே): ஏன், எனது ஆடலும் பாடலும் அத்தனை கேவலமாக இருக்கிறதா என்ன?

பொன்னி (மருதியின் தோளைப் பிடித்துக்கொண்டு): மருதீ, இத்தனை நேரம் விளையாட்டாகப் பேசினோம். இப்பொழுது உண்மையைச் சொல்லுகிறேன். உனது ஆடலையும் பாடலையும் இப்படிக் கூடவே இருந்து அனுபவிக்க நான் முன்னுளிலே தவம் செய்திருக்கவேணும். ஆனால் நீ இப்படி இரவு பகலாக வஞ்சி நாட்டிளவரசரை மகிழச்செய்ய வேண்டுமென்ற ஆர்வத்தினாலே பயிற்சி செய்து உடம்பைக் கெடுத்துக்கொள்ளக் கூடாதே என்பதுதான் என்னுடைய கவலை. வஞ்சிக்கொடி போன்ற உன்னுடைய மேனி இத்தனை பயிற்சியையும் தாங்குமா என்று எனக்குக் கவலையாக இருக்கிறது.

பொன்னி: சரி சரி, நாளைக்குத் தாலி கட்டுகிறேன். கழுத்தே சுகமா இரு என்றுனும் ஒருத்தன்.

மருதி: அப்படி ஒருத்தன் சொல்லவில்லை; ஒருத்தி தான் சொன்னாளாம்—நாளைக்குத் தாலி கட்டுவான் கழுத்தே சுகமா இரு—என்று சொன்னாளாம்; சொல்லு வதையாவது சரியாகச் சொல்.

பொன்னி: ஒருத்தன் சொல்லியிருந்தாலும் சரி; ஒருத்தி சொல்லியிருந்தாலும் சரி—விஷயம் ஒன்றுதான்.

மருதி: அம்மணி, நீ பழைய பல்லவியை மறுபடியும் தொடங்கிவிடாதே. வா, காவிரிக்குப் போவோம். நண்டுக் குட்டி பிடித்துக் கொடுக்கிறேன் வா.

பொன்னி: வெளியே போக இப்பவாவது மனது வந்ததே—தாயே உனக்குக் கோடி வந்தனம்.

மருதி: நண்டுக் குட்டி போதுமா? தவளைக் குட்டி வேண்டாமா? அப்புறம் மீன் குட்டி? எல்லாம் பிடிக் கலாம் வா.

[சிரித்துக்கொண்டே இருவரும் புறப்படுகிறார்கள்.]

திரை

## காட்சி ஐந்து

[காவிரிக் கரையிலே மருதியும் பொன்னியும் பேசிக் கொண்டே வருகிறார்கள். காலை சுமார் எட்டு மணி இருக்கும் ஆட்டனத்தி சுய நினைவில்லாது, கரையில் வெள்ளத்தில் ஒதுக்கப்பட்டுக் கிடக் கிறான்.]

மருதி: நேற்று வெள்ளம் அதிகமாக வந்திருக் கிறது. நாம் கவனிக்கவே இல்லையே?

பொன்னி: நேற்றுப் புதுப்புனல் விழா என்பதைக் கூட நீ மறந்துவிட்டாய்—எனக்கும் ஐம்பத்தாறு நாழிகையும் வீட்டுக்குள்ளேயே சிறைத் தண்டனை.

மருதி: பொன்னி, மறுபடியும் நீ அந்தப் பழைய ஒப்பாரியை வைத்து விடாதே. கழார்ப் பட்டனத்தில் தானே புதுப்புனல் விழாவெல்லாம்—இங்கே நமக்கென்ன வந்தது?

பொன்னி: புதுப்புனல் விழாவை நாடெங்கும் கொண்டாட வேண்டுமென்று அரசர் விரும்புவதாகப் போன மாதந்தானே என்னிடம் சொன்னாய்? இப்போ வஞ்சிநாட்டு இளவரசரைப் பார்க்கப் போகிற உற்சாகத்திலே அதையும் மறந்துவிட்டாயா?

மருதி (ஆட்டனத்தியைத் தற்செயலாகப் பார்த்து)· பொன்னீ: அதோ யாரோ வெள்ளத்திலே அடிபட்டு வந்து கிடக்கிறது போலத் தெரிகிறது.

[வேகமாக அருகில் சென்று பார்க்கிறாள். பொன்னியும் பின் தொடருகிறாள்.]

ஐயோ, உடம்பிலே உயிரிருப்பது போலத் தெரியவில்லையே? யார் இவர்? பார்த்தால் மிகவும் கம்பீரமான தோற்றமுடையவராக இருக்கிறார்.

[ஆட்டனத்தியின் பக்கத்தில் அமர்ந்து நெஞ்சின் மேல் கை வைத்துப் பார்க்கிறாள். முகத்திலே கை வைத்து மூச்சு வருகிறதா என்று பார்க்கிறாள்.]

பொன்னி: வெள்ளத்திலே அகப்பட்டு இறந்து போனாரோ என்னவோ—அவரைப் பார்! மன்மதனைப் போல இருக்கிறார். மருதீ, வெள்ளத்தில் அகப்பட்டவர்களுக்குச் சிகிச்சை பண்ணத்தான் உனக்கு நன்றாகத் தெரியுமே—எல்லாம் செய்து பார்—ஒருவேளை உயிர் இருந்தாலும் இருக்கும்,

[மருதி சிகிச்சைகள் செய்கிருள். ஆட்டனத்தியின் நெஞ்சிலும் கைகளிலும் தேய்த்துச் சூடு பண்ணுகிருள்.]

மருதி : இவர் தண்ணீரை ஒன்றும் அதிகம் குடித்து விடவில்லை. வெள்ளத்திலே நீந்துவதில் கெட்டிக்காரரர் போலிருக்கிறது......பொன்னி, நீ வீட்டுக்கு ஓடிப்போய் புதிதாக ஆடைகள் எல்லாம் எடுத்துக் கொண்டுவா. அவர் மூர்ச்சையடைந்துதானிருப்பதாகத் தோன்று கிறது. என்னுடைய தந்தை வஞ்சி நாட்டிற்குப் போவதற்குப் புதிய ஆடையெல்லாம் வாங்கி வைத்திருக்கிருர்.

பொன்னி : இதோ ஒரு நொடியில் வந்துவிடு கிறேன். நீ கவனமாக சிகிச்சையெல்லாம் செய்...ஆடையெல்லாம் எங்கிருக்கும்?

மருதி : அந்தப் பெரிய பேழையிருக்கிறதே அதிலேயே இருக்கும், வேகமாக எடுத்துவா.

[பொன்னி வீட்டை நோக்கி ஓடுகிருள். மருதி ஆட்டனத்தியின் உள்ளங்கையைத் தேய்த்துச் சூடுண்டாக்கிப் பிறகு அவன் கைகளை மேலும் கீழுமாகத் தூக்குகிருள். ஆட்டனத்தி மெதுவாக மூச்சு விட்டுக் கண்களைத் திறந்து பார்க்கிருன்.]

மருதி (பெரு மகிழ்ச்சியோடு) : ஆஹா, மூச்சு மெதுவாக வருகிறது—அவர் கண்களைத் திறந்து பார்க்கிருர்...(அத்தியைப் பார்த்து) அப்படியே அசையாமல் படுத்திருங்கள். உங்கள் உடம்பு மிகவும் நலிந்திருக்கிறது.

அத்தி (மெதுவாகத் தணிந்த குரலில்): நீ......யார்? நான்...எங்கே இருக்கின்றேன்?

மருதி : உங்களுக்கு இனிமேல் ஒன்றும் ஆபத்தில்லை. பேசாமல் படுத்திருங்கள். உங்கள் காலிலே உணர்ச்சி நன்ருக வரும்படி நான் செய்கிறேன்.

[அத்தியின் காலை மெதுவாகத் தேய்க்கிறாள்.]

அத்தி : இது கழார்ப்பட்டணமா? யார் அங்கே பாடுகிறார்கள்?

மருதி : இது கழார் அல்ல—காவிரிப்பூம் பட்டினத்திற்கு அருகிலே இது ஒரு தனி இடம். என் வீட்டைத் தவிர இங்கே வேறு வீடு கிடையாது...

அத்தி : காவிரிப்பூம் பட்டினமா?......அப்போ நீ யார்?

மருதி : நான் பாண் மகள்; மருதி என்னுடைய பெயர்.

[பொன்னி ஆடைகளை எடுத்துக்கொண்டு ஓடி வருகிறாள்.]

அதோ புதிய ஆடைகளெல்லாம் வந்துவிட்டன... (பொன்னியைப் பார்த்து) பொன்னீ, அவர் மிகவும் களைத்திருக்கிறார். வீட்டிற்கு ஓடிப்போய் இளஞ்சூடான பாலிலே கொஞ்சம் தேன் கலந்து எடுத்துக்கொண்டு வா.

பொன்னி : ஈரமான ஆடைகளை யெல்லாம் களைந்து விடும்படி சொல், மருதி. இதோ நான் வந்துவிடுகிறேன்.

[மறுபடியும் வீட்டை நோக்கி ஓடுகிறாள்.]

மருதி : இந்தப் போர்வையை முதலிலே உடம்பில் போர்த்திக் கொள்கிறீர்களா? அப்பொழுது உடம்பிலே கொஞ்சம் சூடு ஏற்பட்டு உணர்ச்சி யுண்டாகும்.

அத்தி : வெள்ளத்திலே அடிபட்டவர்களைக் காப்பாற்றும் வித்தையெல்லாம் உனக்கு நன்றாகத் தெரியும் போலிருக்கிறதே......?

மருதி : காவிரி கடலிலே கலக்கின்ற இந்த இடத்திலே பிறந்தவர்களுக்குத் தண்ணீரே எல்லாம்—வாழ்வும்

அதிலேதான்—தாழ்வும் அதிலேதான்—அதனாலே இந்த விஷயமெல்லாம் நன்றாகத் தெரியும்.

அத்தி : இருந்தாலும் மருதி, உன் கைகளுக்கே உயிர் கொடுக்கும்படியான சக்தி தனிச் சிறப்பாக இருக்கிறது.

மருதி : நீங்கள் நீந்துவதில் மிகவும் திறமை வாய்ந்தவரென்று தெரிகிறது.

அத்தி : எப்படிக் கண்டாய்?

மருதி : இல்லாவிட்டால் தண்ணீரை நிறையக் குடிக்காமல் சமாளித்துக்கொண்டு வந்திருக்க முடியாது. வெள்ளத்தில் அகப்பட்டவர்களில் பலபேர் இந்தத் திறமை இல்லாமல்தான் உயிரிழக்கிறார்கள்.

அத்தி : உன்னுடைய உதவி இல்லாவிட்டாலும் நானும் இன்று உயிரிழந்திருப்பேன்.

மருதி (பொன்னி பால் கொண்டு வருவதைப் பார்த்து) : அதோ பால் வந்துவிட்டது—பொன்னீ, பாலை இப்படி என்னிடம் கொடு.

[பாலை வாங்கிக்கொள்கிறாள்.]

கொஞ்சம் பால் சாப்பிடுங்கள். சூடாகப் பால் அருந்தினால் உடம்புக்குச் சக்தி வரும்.

[அத்தி கையை நீட்ட முயல்கிறான். கை நடுங்குகிறது. தண்ணீரில் நீண்ட காலமிருந்ததால் நரம்புகளெல்லாம் தளர்ச்சியுற்றிருக்கின்றன. குவளையைப் பிடிக்க இயலாது தடுமாறுகிறான்.]

உங்கள் கை நடுங்குகிறதே. வெள்ளத்திலே நீண்ட நேரமிருந்ததால் நரம்பெல்லாம் தளர்ந்து உணர்ச்சியற்

றிருக்கிறது- வேண்டாம். நீங்கள் அசையாமலிருங்கள்— நானே பாலைத் தங்கள் வாயில் மெதுவாக ஊற்றுகிறேன்.

[பாலை வாயில் மெதுவாகக் கொடுக்கிறாள். அத்தி ஆவலோடு பருகுகிறான்.]

திரை

## காட்சி ஆறு

[கழார் நகரில் கரிகாற் பெருவளத்தானின் அரண்மனையில் ஒரு சிறிய மண்டபம். கரிகாற் பெருவளத்தானும் அமைச்சரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். நண்பகல் நேரம்.]

கரிகாலன் : வலை வீசுவோர் எதுவரையிலும் சென்றிருக்கிறார்கள்?

அமைச்சர் : ஓடக்காரர்களும் அரிப்புக்காரர்களும் இன்று காலையிலே நான் அவர்களை விட்டுப் பிரியும் போது காவிரிப் பூம்பட்டினத்திற்கு நான்கு நாழிகை தூரத்தில் இருந்தார்கள். இப்பொழுது உச்சி வேளையாகி விட்டது. இதற்குள் காவிரிப்பூம்பட்டினத்தை அணுகியிருப்பார்கள் என்று நினைக்கிறேன்.

கரிகாலன் : அவர்களிடமிருந்து சேதி ஒன்றும் வரவில்லையா?

அமைச்சர் : நாழிகைக்கு ஒருவராக அங்கிருந்து சேதி கொண்டு வருவோர் வந்துகொண்டு தானிருக்கிறார்கள். ஆனால், ஒரே சேதிதான். இன்னும் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. முடியவில்லை. இதேதான்.

கரிகாலன் (கவலை மிகுந்து): நேற்றுக் காலையில் அவர் வெள்ளத்தில் இறங்கியதிலிருந்து, கணக்கிட்டால் ஐம்பத்தாறு நாழிகைக்கு மேலாய் விட்டதே? இனிமேல் அவரை உயிரோடு காண முடியுமா?

அமைச்சர்: எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. எப்படியும் நாம் செய்கின்ற முயற்சியைச் சிறிதும் தளர விடாமல் காவிரி கடலில் கலக்கும் இடம் வரையில் அலசிப் பார்த்து விடலாம்.

கரிகாலன் : கடற்கரை வரையிலும் பார்ப்பதில் பயன் கிடைக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. எதற்கும் பாருங்கள். கழாருக்கு அருகிலேதான் முக்கிய மாகக் கவனம் செலுத்த வேண்டும். காவிரிப்பூம் பட்டினம் வரையில் அடித்துச் சென்றிருந்தால் அவரை உயிரோடு காண முடியாது.

அமைச்சர் : (துக்கத்தோடு கம்மிய குரலில்): உயி ரோடு காண வேணு மென்பதுதான் என்னுடைய ஆசை. ஆனால்...

கரிகாலன் : அமைச்சரே, உங்கள் குறிப்பு எனக்கும் தெரிகிறது. இங்கே தேடினால் இனிமேல் அவரை உயிரோடு காண்பது அரிதுதான் (அரசன் குரல் அடைத்துக் கொள்ளுகிறது. அவன் கண்கள் கலங்கு கின்றன)...அமைச்சரே...எனது கனவு இப்படியா முடிய வேணும்?

அமைச்சர் : அரசே, நீங்கள் மனம் தளரக்கூடாது. அரசியார் இப்பொழுதே மிகவும் சோர்ந்து படுத்த படுக்கையாய் விட்டார்கள். ஆதிமந்தியின் நிலைமையை வேறு கவனிக்க வேண்டும்.

கரிகாலன் : ஆதிமந்தி இப்பொழுது எங்கே இருக் கிறாள்?

அமைச்சர் : அவர் காவிரி யோரமாகவே நடந்து கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு கல்லையும் மரத்தை யும் பார்த்து ஆட்டனத்தியைப் பற்றி விசாரித்துக் கொண்டே போகிறார்கள்.

கரிகாலன் : அவள் மனநிலை எப்படி இருக்கிறது? ஏதாவது......

அமைச்சர் : இதுவரை எவ்விதமான நன்மையும் ஏற்படவில்லை. அவர் கடற்கரை வரையிலும் போய்த் தான் திரும்புவாரென்று தோன்றுகிறது.

கரிகாலன் : அவளுடைய ஆழ்ந்த காதலை இப் பொழுதுதான் நான் உணர்கிறேன். எனக்கென்னவோ அவள் மனம் சாந்தியடைந்து இயல்பான நிலைமை யடையுமென்று தோன்றவில்லை.

அமைச்சர் : ஆதிமந்தியைத் தடுத்து நிறுத்திஞல் மனம் நிச்சயமாகக் குழம்பிப் போய்விடும். இப்படியே சென்ருலாவது ஒருவேளை அவர் ஆறுதல் அடைய வழி யிருக்கிறது.

கரிகாலன் : அவளை எச்சரிக்கையோடு காத்துக் கொள்ளுங்கள். பக்கத்திலே யாரும் செல்லவேண்டாம். மருத்துவர்கள் கூறுகிறபடியே விட்டுப் பார்ப்போம். (அழுதுஅழுது அரற்றி அரற்றி அப்படியாவது அவளு டைய மனம் சாந்தி யடையுமா என்று பார்ப்போம்.).... கலைக்காகவே பிறந்த மகள்......இப்படி......

[கரிகாலன் கலங்குகிருன்.]

அமைச்சர் : அரசே...உங்களுடைய கலங்கா நெஞ்சம் இப்பொழுது எங்கே போய்விட்டது...?

கரிகாலன் : நான் கலங்கவில்லை, அமைச்சரே—நான் கலங்கவில்லை. நம்மாலான முயற்சியெல்லாம் செய்து பார்த்துவிடுவோம்......நீங்கள்தான் இந்தச் சமயத்தில் எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

[அமைச்சர் தலை வணங்குகிருர்.]

திரை

## நான்காம் அங்கம்

### காட்சி ஒன்று

[மருதியின் வீட்டிற்கு வெளியே நின்று மருதியும் பொன்னியும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். மாலை நேரம்.]

பொன்னி : மருதீ, உனது ஆடலையும் பாடலையும் பார்த்து மகிழ்வதற்கு அவர் கிடைத்துவிட்டாரே—என்னை ஏன் இன்னும் சிறையில் வைத்திருக்கிறாய்?

மருதி (சிரித்துக்கொண்டே) : அவர் இருந்தால் வேண்டாமா?

பொன்னி : நான் எதற்கு? இந்த நான்கு நாட்களாக நீ என்னை ஒரு தடவைகூட உனது ஆட்டத்தைப் பார்க்கும்படி கூப்பிடவில்லையே?

தருதி : அதனால் உனக்குக் கோபமா?

பொன்னி : இல்லை மருதி, இன்றைக்காவது உனது கட்டுக் காவலை விட்டுக் காவிரிப்பூம் பட்டினத்துக்குப் போய் வரலாமா என்றுதான் கேட்கிறேன். நீயும் அவரோடு தனியாக......

மருதி (நாணத்தோடு) : போடி குறும்புக்காரி. நீ எங்கேயும் போகக் கூடாது.

பொன்னி : இப்போ மாலை வேளையாய் விட்டது. நான் போய்விட்டு இருட்டாவதற்குள் வந்துவிடுகிறேனே?

மருதி : பொன்னி—நீ போகவே கூடாது. ஒரு வேளை என் தந்தை சீக்கிரமாகவே திரும்பிவந்து நீயும் இல்லாதபோது என்னை அவரோடு பார்த்தால் என்ன நினைப்பார்?

பொன்னி : என்ன நினைப்பார்? ஒன்றும் இல்லாததை நினைக்கமாட்டார்......

மருதி (சற்றுக் கோபமாக): பொன்னீ, உனக்கு விளையாடுவதற்கும் வேடிக்கை பேசவும் சமயமே தெரிவதில்லை.

பொன்னி : மருதி, நான் என்ன சொல்லிவிட்டேன் இப்படி முகத்தைக் காட்டுகிறாய்? அவரோ இன்னும் எழுந்து நடக்கக்கூடச் சக்தியில்லாமல் படுத்த படுக்கையாகக் கிடக்கிறார். வெள்ளத்திலே அடித்து வந்தவரை நீ பிழைக்க வைத்தாய். அவரை வீட்டிலே வைத்திருப்பதைப்பற்றி உன் தந்தை ஒன்றும் தவறாக நினைக்க மாட்டாரென்றுதான் சொன்னேன்.

மருதி : சரி, அவர் என்ன நினைத்தாலும் அதைப் பற்றிக் கவலையில்லை. நீ மட்டும் இந்த இடத்தை விட்டு எங்கும் போகக்கூடாது.

பொன்னி : தாயே, அப்படியே உன் ஆணைப்படியே நடக்கிறேன். கோபித்துக் கொள்ளாதே.

மருதி (புன்முறுவல்பூத்து): பொன்னீ, நான் ஏதாவது கடுமையாகப் பேசியிருந்தால் என்னை மன்னித்துக் கொள். உன் மனம் நோகுமானால் என்னால் அதைத் தாள முடியாது.

பொன்னி : போடி, அசடு எனக்கொன்றும் வருத்தமில்லை. நீ சொல்லுகிறபடி இங்கேயே இருக்கிறேன். கவலைப்படாதே··· ஆமாம்...அவர் யாரென்று கேட்டாயா?

மருதி : அதுதான் அவர் இன்னும் சொல்லவில்லை. ஒரு சமயத்திலே சொல்லுகிறவர் போல வாயெடுக்கிறார். மறுபடியும் அதை மறைத்துக்கொள்கிறார். அவர் யாராக இருக்க முடியுமென்று உனக்கு ஏதாவது தோன்றுகிறதா?

பொன்னி : பார்த்தால் அரசகுமாரனைப்போல இருக்கிறார். ஆனால் அரசகுமாரன் இப்படி ஆற்றிலே எதற்காக வெள்ளத்தில் அகப்படப் போகிறார்?

மருதி : அதுதான் எனக்கும் விளங்கவில்லை. அற்புதமான பாட்டெல்லாம் எழுதுகிறார். அற்புத மாகப் பாடுவாரென்றும் தெரிகிறது ஆனால் இன்னும் அதற்கு வேண்டிய வலிமை உடம்பிலே ஏற்படவில்லை. அவர் உயிர் பிழைத்ததே ஆச்சரியம்.

பொன்னி : ஒரு வேளை அவர் நீச்சல் போட்டி யிலே சேர்ந்திருப்பாரோ?

மருதி : பொன்னி, அதைப்பற்றி நாம் ஏன் இப் பொழுது கவலைப்படவேண்டும்; கடைசியில் அவரே ஒரு நாளைக்குச் சொல்லாமலா போய்விடுவார்? இப் பொழுது உடம்புக்கு வலிமை ஏற்படும்படி செய்வது தான் நமது முதல் வேலை.

பொன்னி : அதுதான் இரவும் பகலும் அவர் பக்கத்திலிருந்தே நீ கவனித்துக் கொள்ளுகிறாயே? இன்னும் என்ன செய்ய வேண்டும்?

மருதி : அவருக்குப் பணி செய்வதிலும் அவருக்கு முன்னாலே ஆடுவதிலும் பாடுவதிலும் எனக்கு ஒரு தனி இன்பம் பிறக்கிறது பொன்னி.

பொன்னி : இல்லாவிட்டால் நீ இவ்வளவு அக்கறை எடுத்துக்கொள்ளுவாயா?

மருதி (சிரித்து) : போடி, யாராக இருந்தாலும் ஆற்றிலே விழுந்து இப்படி மூர்ச்சையடைந்து கிடந்தால் அவரைக் கவனிக்காமல் விட்டு விடுவோமா?

பொன்னி : கவனிக்க மாட்டோம் என்று நான் சொல்லவில்லையே? மருதி, மாலை நேரம் அவருக்கு ஏதா வது உணவு கொடுத்தாயா?

மருதி : ஆமாம். அவர் இவ்வளவு நேரம் தனியாக இருந்துகொண்டு ஏதாவது கவலைப்படுவார். நீ போய் பால் கஞ்சியில் தேன்விட்டு எடுத்து வா. நான் அவரைப் போய்ப் பார்க்கிறேன்.

[இருவரும் போகிறார்கள்.]

திரை

## காட்சி இரண்டு

[அதே மாலை நேரம். அத்தி ஒரு மஞ்சத்திலே படுத்திருக்கிறான். மருதி அவன் கால்களை வருடிக் கொண்டு அருகிலே ஒரு ஆசனத்தில் அமர்ந்திருக்கிறாள்.]

அத்தி : மருதீ, என் கால்களை வருடியது போதும்... விட்டுவிடு. எத்தனை நேரம் இப்படி நீ உன் கை நோக எனக்குப் பணி செய்வாய்?

மருதி : ஆற்று வெள்ளத்தை எதிர்த்துப் போராடி உங்கள் கால்கள் நலிந்திருக்கின்றன. மெதுவாக வருடினால் அவைகளுக்கு வலிமை ஏற்படும்.

அத்தி : எனது கால்களை நிலத்திலே ஊன்றினால் இன்னும் தள்ளாடுகின்றன. இருந்தாலும் எனக்காக இரவு பகலாகத் துன்பப்படுவதை என்னால் சகிக்க முடியவில்லை.

மருதி : எனக்கு இது துன்பமே இல்லை. உங்களுக்குப் பணிவிடை செய்வதையே எனது பாக்கியமாகக் கருதுகிறேன்.

அத்தி : நீ எனக்கு உயிர் கொடுத்தாய்...உன்னால் தான் நான் பிழைத்தேன். அந்த உதவியொன்று போதாதா? இப்படி அறுபது நாழிகையும் நீ சிரமப்பட வேண்டுமா?

மருதி: எனக்குச் சிரமமே இல்லை. நீங்கள் ஒரு தொந்தரவும் இல்லாமல் முழு உடல் வலிமையும் பெற்று எழவேண்டும். அதுதான் எனது ஆசை.

அத்தி: மருதி, நான் சற்று எழுந்து நடமாடிப் பார்க்கட்டுமா? இப்பொழுது நீ கொடுத்த பால்கஞ்சியை அருந்திய பின் கொஞ்சம் உடம்பிலே தெம்பு ஏற்பட்டிருக்கிறது.

மருதி: இன்றைக்கு வேண்டாம். நாளைக்கு அந்தச் சோதனையை வைத்துக்கொள்ளலாம். நேற்று மாதிரி எழுந்து நின்று விழுந்துவிடப் போகிறீர்கள்.

அத்தி (சிரித்து): ஆமாம், நேற்று என்னை நீ பிடித்துக் கொள்ளாமலிருந்தால் நான் அப்படியே தரையில் தடாலென்று விழுந்திருப்பேன். என்னைத் தாங்கிப் பிடிக்கக் கூடிய வலிமை உனது பூங்கொடி போன்ற உடம்புக்கு எங்கிருந்து கிடைத்ததோ தெரியவில்லை. அது எனக்கு இன்னும் ஆச்சரியமாக இருக்கிறது.

மருதி (மகிழ்ச்சியோடு): இப்பொழுது நினைத்தால் எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்தச் சமயத்திலே எப்படியாவது உங்களைக் கீழே விழாமல் செய்யவேண்டுமென்ற ஒரே எண்ணந்தான் என் உள்ளத்திலே இருந்தது.

அத்தி (சிரித்துக் கொண்டே): உனது வலிமையை மறுபடியும் சோதித்துப் பார்ப்பதற்காவது இப்பொழுது எழுந்து நடக்கலாமென்று தோன்றுகிறது.

மருதி: ஐயோ, வேண்டாம்- நீங்கள் அப்படியே சற்று உறங்குங்கள். உறக்கந்தான் உடம்புக்கு விரைவிலே வலிமை கொடுக்கும்...நான் பாடட்டுமா?

*அத்தி:* உனது பாடலும் ஆடலும் எனக்கு அமுதமாக இருக்கின்றன. அவற்றை அனுபவிப்பதற்காவது இப்படியே ஆயுளெல்லாம் படுத்திருக்கலாமென்று ஆசையுண்டாகிறது.

*மருதி:* (பாடிக்கொண்டே ஆடுகிருள்.)

பல்லவி

வருவாரோ அவர் இன்று
வருவாரோ கிளியே—என்னுள்ளம்
மகிழ்ந்திடவே என்னுடன் கூடி இன்புறவே
(வருவாரோ)

அனுபல்லவி

முருகா முருகா எனநான் சதா உரைவாசகம் கேட்டு நீயும்
முருகா முருகா என்பாய் கிளியே—அவர் மனம்
உருகாதோ உருகியவர் எனைநாடி (வருவாரோ)

சரணம்

அம்மா என்றழைக்கவும் மறந்தேன் அவர் பெயரே
சொல்லி நாணினேன்
அன்னமென்ருலும் முருகனே அள்ளி உண்ணுவேனென்றேன்
அம்மான் மகளொடு வரும் குமரனிதை அறியாரோ அறிந்தே
அன்புடன் அவரென்னை அணைத்தருள் புரிந்திடவே
(வருவாரோ)

*[பாடலும் ஆடலும் நிற்கின்றன. அவற்றிலே மெய்மறந்திருந்த அத்தி திடீரென்று பேசத் தொடங்குகிருன்.]*

அத்தி: மருதி, நான் உயிரோடிருப்பதைப் பற்றி அவர்களுக்குச் சேதி அனுப்பவேண்டும், என்னைக் காணுமல் எல்லோரும் வருந்திக் கொண்டிருப்பார்கள்.

மருதி: தாங்கள் யாரென்றே இன்னும் கூறவில்லை. எப்படிச் சேதி அனுப்புவது? யாருக்குச் சேதி அனுப்ப வேண்டும்?

அத்தி: உனக்கு நான் யாரென்று இன்னும் தெரியாதா? ஆமாம்—(யோசனையோடு) இந்த நான்கு நாட்களாக யாருமே என்னைத் தேடிக்கொண்டு வரவில்லையா?

மருதி: இந்தப் பக்கத்திலே யாருமே வரக்காணும், ஒருவேளை வந்திருப்பார்கள். எங்கள் கண்ணிலே படவில்லை.

அத்தி: இந்தப் பக்கத்திலே வந்திருந்தால் உங்களைப் பார்த்துக் கேட்காமலா இருப்பார்கள்? சோழ நாட்டிலே என்னைத் தேடுவதற்குக்கூட ஆட்கள் இல்லையா? ஒரு வேளை நான் வெள்ளத்திலே போனதைப்பற்றி யாருமே அதிகம் கவலைப்படவில்லையோ என்னவோ?

மருதி: அப்படி இருக்குமா? அவர்கள் எங்கே தேடி அலைகிறுர்களோ—என்ன துன்பப்படுகிறுர்களோ—உங்களுக்கு மனைவியிருந்தால்......

அத்தி (கொஞ்சம் வெறுப்போடு) எனக்கு மனைவியா? மனைவியிருந்தால் அவளுக்காகவாவது என்னை இதற்குள்ளே தேடிக் கொண்டு வந்திருக்க மாட்டார்களா? சோழநாடு முழுவதும் என்னைத் தேடுவதிலே ஈடுபட்டிருக்க வேணுமே?

மருதி: தங்களுடைய வரலாற்றைக் கூறினுல் நான் சேதி அனுப்புகிறேன். எனக்கும் தாங்கள் யாரென்று தெரிந்துகொள்ள ஒரே ஆவலாக இருக்கிறது

## காட்சி மூன்று

[அதே மாலை நேரம். மனங் குழம்பி வாடுகின்ற ஆதிமந்தி காவிரிக்கரையோரமாக வந்து கொண்டிருக்கிறாள். மனம் கலங்கியிருக்கிற தென்பது அவளுடைய பார்வையிலே தெரி கின்றது. எதையோ பார்த்துச் சிரித்துக் கொள்ளுகிறாள். தொடர்பில்லாமல் பேசு கிறாள்.]

ஆதிமந்தி: சேர நாட்டு மலையருவியா இது......? காவிரி சாந்தமானவளாயிற்றே......? அவள் எனக்குத் தாயல்லவா?......ஆட்டனத்தி, நான் ஆடிக்கொண்டே இருக்கட்டுமா?...இந்த அனிச்சப்பூ உங்களுக்குப் பிடிக் காதா? என்னைப் பார்த்தால் அழகாயில்லையா...!

[எதையோ ஏறிட்டுப் பார்க்கிறாள். காவிரியின் பக்கம் அவள் பார்வை செல்லுகிறது. முகத் திலே சோகம் படர்கிறது......தேம்பி அழு கிறாள்......பிறகு பாடத் தொடங்குகிறாள்.]

(பாட்டு)

**பல்லவி**

**தேடித்தேடி அலைந்தேனே**
**சேரமன்ன ஆட்டனத்தி...... (தேடித்தேடி)**

**அனுபல்லவி**

**ஆடிமாத வெள்ளம் ஆடவந்த நாதா**
**ஆதி உள்ளம் நொந்தே அழைத்தேன் இங்கு வாரீர்**
**(தேடித்தேடி)**

[அனுபல்லவியைப் பாடிப் பிறகு பல்லவியைப் பாடிக்கொண்டே மறைகிறாள். சற்று நேரம் அவளுடைய சோகப் பாட்டுக் கேட்டு, மெது வாக மங்குகிறது. முன்பே சந்தித்த மூன்று பெண்கள் வருகிறார்கள்.]

முதற்பெண்: (ஆதிமந்தி பாடி அழுவதைக் கேட்டுப் பறவைகளும் விலங்குகளும் வாயடைத்து விசனத்தில் ஆழ்ந்திருக்கின்றன)

இரண்டாம் பெண்: காவிரிக் கரையிலேயே இப்படி எவ்வளவு தூரம் போக முடியும்...? கடலும் அருகில் தானே இருக்கிறது...?

மூன்றாம் பெண்: கடற்கரையை அடைந்துவிட்டால் அதற்மேல் என்ன செய்வாரோ......(பயந்த குரலில்) ஒருவேளை கடலிலேயே···

முதற்பெண்: உஸ்...அப்படி...ஏதாவது அமங்கல மாகச் சொல்லாதே......

இரண்டாம் பெண்: ஆட்டனத்தி உயிருடனிருந் தால் இதற்குள் திரும்பி வந்திருக்க மாட்டாரா?

மூன்றாம் பெண்: கடலுக்குப் பக்கத்திலே வந்து ஓடக்காரர்கள் தேடிப் பார்த்தார்களோ என்னவோ?

முதற் பெண்: ஆமாம். தேடி அவனுடைய உடம்பை எடுத்து வந்தால் அதனாலே என்ன பலன் கிடைக்கும்? நமது இளவரசி அதைப் பார்த்து உயிரே விட்டு விடுவார்கள்.

மூன்றாம் பெண்: ஆட்டனத்தியோடு சேர்ந்து கட லோடு போய்விட்டால்கூட நமது இளவரசியின் துன்பம் தீரும். அவருடைய துன்பத்தை என்னாலே பார்க்கவே முடியவில்லை.

முதற் பெண்: வாருங்கள், இருட்டாகப் போகிறது. ஆதிமந்தி எந்த இடத்திலே படுத்து உறங்கப் போகிறார் களோ...பக்கத்திலே சென்று காவலாவது செய்வோம்.

இரண்டாம் பெண்: ஆமாம்.........வாருங்கள் போவோம்...பகலிலே வேண்டுமானால் இளவரசியைத் தனியாக விட்டுவிடலாம்...இரவிலே அப்படி முடியுமா?

மூன்ரும் பெண்: நேற்றிரவு ஒரு நாணற்புதரிலே இளவரசி படுத்திருந்ததை நினைத்தாலே எனக்கு பயமாக இருக்கிறது. அந்தப் புதரிலெல்லாம் பாம்புகள் நிறைய இருக்குமாமே?...

[போகிருர்கள்.]

திரை

## காட்சி நான்கு

[மருதியின் இல்லம். ஆட்டனத்தி ஒரு சாய்வான தரையிலே ஊன்றிக்கொண்டிருக்கிருன். பக்கத்திலே அழகின் வடிவாக மருதி நிற்கிருள். மாலை நேரம்.]

அத்தி: நான் இங்கு வந்து பல நாட்களாகி விட்டன. உடம்பும் சரியாகி விட்டது...இனி நான் புறப்பட வேண்டாமா?

மருதி: இன்னும் உங்கள் கால்கள் ஒவ்வொரு சமயத்திலே தள்ளாடுகின்றனவே? கையுங்கூடச் சில சமயங்களிலே தாளுக நடுங்குகிறது...

அத்தி: இருந்தாலும் இனி ஒன்றும் என் உடம்பைப் பற்றிக் கவலையில்லை...நான் நாளைக் காலையில்...

மருதி (சட்டென்று இடைமறித்து): ஏன்; அடியாளின் பணிவிடையில் ஏதேனும் குறை ஏற்பட்டிருக்கிறதா?

அத்தி: மருதி, உனது அன்பிலே நான் திளைத்துப் போயிருக்கிறேன். கண்ணை இமை காப்பது போல என்னை நீ காத்து வருகிருய்...உன் அன்பையும் உனது ஆடல் பாடலின் அருமையையும் நினைத்தால் உலகத்

தையே மறந்துவிட்டு இங்கேயே இருந்துவிடலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனல்...

மருதி (மகிழ்ச்சியோடு): இங்கேயே நீங்கள் தங்கி விடுங்கள்...நான் தங்களுக்குச் சதா பணிவிடை செய்து கொண்டிருக்கும்படியான பாக்கியத்தை எனக்குக் கொடுங்கள்.

அத்தி: மருதி, இப்படிப் பேசாதே, நீ இப்படிப் பேசும்போது என் மனம் தடுமாறுகிறது......காவிரி வெள்ளத்தை எதிர்த்துப் போராடிப் போராடி, உடலும் உள்ளமும் தளர்ந்து கிடக்கிற இந்த நிலையிலே நான் எதையும் தெளிவாகச் சிந்திக்க முடியவில்லை......உனது அன்பு காவிரி வெள்ளத்தைவிட அதிகமாக என் உள்ளத்திலே மோதுகிறது.

மருதி: பார்த்தீர்களா...? உங்கள் உடம்பு இன்னும் தளர்ந்திருக்கிறதென்று நீங்களே ஒப்புக்கொள்கிறீர்கள். இந்த நிலையிலே நாளைக்குப் புறப்பட நினைப்பது சரியா?

அத்தி: நாளைக்கு இல்லாவிட்டாலும் வேறொரு நாளைக்கு நான் புறப்படத்தானே வேணும்...? எவ்வளவு விரைவாக நான்புறப்படுகிறேனே அவ்வளவுக்கும் நல்லது என்று நான் சில சமயங்களிலே நினைக்கிறேன்.

மருதி: நீங்கள் என்னேடு இருக்கிற ஒவ்வொரு நாளும் எனக்குச் சொர்க்க வாழ்க்கையாக இருக்கும்... அதை ஏன் விரைவிலே பிடுங்கிக்கொண்டு என்னை நரகத்திலே தள்ள நினைக்கிறீர்கள்?...

அத்தி: மருதி, நான் புறப்பட்டுப் போவதைப்பற்றி நீ இப்பொழுது நினைக்க வேண்டாம்...அதை நினைக்கிற போதே நீ நரகவேதனை அனுபவிப்பதாக எனக்குத் தோன்றுகிறது...இருந்தாலும் நான் போகக் கடமைப்

*பட்டவன். வா...இப்பொழுது ஏதாவது ஒரு பாடலுக்கு அபிநயம் பிடிக்கிருயா?...இந்த உலகத்தை மறந்து இந்த நாழியிலாவது ஆடலிலே மகிழ்ந்திருப்போம்...வா.*

*[மருதி மகிழ்ச்சியோடு ஆடத் தொடங்குகிருள்.]*

*(பாட்டு)*

**பல்லவி**

**எங்கிருந்தோ வந்தார்—அவர்**
**என்ற னுள்ளம் புகுந்து கொண்டார்**
**—(எங்கிருந்தோ)**

**அனுபல்லவி**

**பொங்கும் இன்பம் கண்டேன் புதுமை வாழ்வும் கண்டேன்**
**தங்கும் இவ்வின்பம் அன்றி மங்குமோ உயிர் வாடுமோ**
**—(எங்கிருந்தோ)**

**சரணம்**

**நெஞ்சம் வெந்துவாட நினைவும் மாறியோட**
**பஞ்சுபோல நைந்தேன் பரிவு கொள்ளுவாரோ**
**தஞ்சம் என்ற போதும் தள்ளுவாரோ நானும்**
**சாமி உள்ளம் அறியேன் தளர்ந்து வாடுகின்றேன்**
**—(எங்கிருந்தோ)**

*[மெய்மறந்து ஆட்டனத்தி ஆடலில் மூழ்கியிருக்கிருன். ஆடல் முடிந்ததும் பேசுகிருன்.]*

*அத்தி: மருதி—உனது பாடலால் என் நெஞ்சைக் கலக்குகிருய்.*

மருதி: பாடல் நெஞ்சைக் கலக்குகிறதா? அது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? எனது ஆடலும் பிடிக்க வில்லையா?

அத்தி: பிடிக்கவில்லை என்று சொல்லுவேனா? இவ் வளவு அற்புதமான ஆடலை நான் கண்டதே இல்லை. ஆடலிலே அந்தச் சேரநாட்டு இளவரசன் ஆட்டனத்தி மிகத் தேர்ந்தவன் என்று கூறுவார்கள். அவனுங்கூட இத்தனை உணர்ச்சி காட்டி அழகாக ஆட முடியாது...

மருதி: ஆட்டனத்திக்கு இந்த ஆடல் பிடிக்கு மென்று நினைக்கிறீர்களா?

அத்தி: இந்த ஆடலிலே அவன் எல்லாவற்றையும் மறந்து விட்டு இதிலேயே மூழ்கிவிடுவானே! இப்படி உயர்ந்த நாட்டியத்தை அவன் பார்க்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.

மருதி (மிகுந்த பூரிப்போடு): ஆட்டனத்தி மகிழ் வதைவிட இன்று நீங்கள் பார்த்து மகிழ்வதையே நான் பெரிதாக மதிக்கிறேன்.

அத்தி; நானா...?

மருதி: ஆமாம் உங்களைவிட ஆட்டனத்தி எனக்குப் பெரிதில்லை.

அத்தி (தன்னையே மறந்து, எழுந்து கொஞ்சம் தள்ளாடி இரண்டு எட்டு வைத்து): மருதீ...(அவள் பக்கம் கையை உணர்ச்சியோடு நீட்டுகிறான்)...எனக்கு என்ன செய்வது...என்ன பேசுவதென்று தெரியவில்லை...

[மருதி அவன் பக்கமாக அடியெடுத்து வைத்து ஆசையோடு அவன் முகத்தைப் பார்க்கிறாள். அவன் கரம் அவள் முகத்தைத் தீண்டுகிறது. மெதுவாகத் தோளின் பக்கம் வருகிறது. சட் டென்று அத்தி கையை எடுத்துக்கொள்ளு கிறான்.]

மருதி: உங்களுக்கு இவ்வளவு மகிழ்ச்சி உண்டாகும்படி நான் ஆடக்கூடிய பயிற்சி பெற்றதற்காக நான் எல்லையில்லாத இன்பம் அடைகிறேன்...நீங்கள் யாரென்றே எனக்குத் தெரியாது. தெரியவும் வேண்டாம்...ஆனாலும் நீங்கள் மகிழ்ச்சியடைந்தால் எனக்குப் போதும்...

அத்தி: மருதீ, என் கண்ணே...

மருதி: கண்ணே என்று என்னை அன்போடு அழைக்கிறீர்களா? அத்தனை பாக்கியம் நான் செய்திருக்கிறேனா? ஆஹா, என் உள்ளம் காட்டாற்று வெள்ளம்போல... மலையிலிருந்து துள்ளிக் குதித்துவரும் வெள்ளம்போல... துள்ளிக் குதிக்கின்றது.

அத்தி (துணுக்குற்று): காட்டாற்று வெள்ளமா?

[அவன் தலை சுழல்கிறது. அவன் ஆதிமந்தியின் வார்த்தைகளை நினைந்து கலங்குகிறான். தலையிலே இரு கைகளையும் சேர்க்கிறான்.]

மருதி: ஏன் அப்படிக் கலவரத்தோடு பார்க்கிறீர்கள்? ஆற்று வெள்ளம் என்றவுடனே பயந்துவிட்டீர்களா? அடியாளுடைய இல்லத்திலே இருக்கும்போது இனி ஆற்று வெள்ளம் உங்களை ஒன்றும் செய்யமுடியாது...

அத்தி: மருதி, நான் நாளைக்குப் புறப்பட்டுப் போய்வரட்டுமா?

மருதி (திடுக்கிட்டு): ஏன் மறுபடியும் இப்படிச் சொல்லுகிறீர்கள்? உங்களை விட்டுப் பிரிந்து எனக்கு இங்கே வாழ்வேது?

[கண் கலங்குகிறாள்.]

அத்தி (சிந்தனையோடு திகைத்து நின்று): நீ கவலைப் படாதே மருதி...நீ கவலைப் படும்படியாக நான் என்றும்

நடந்துகொள்ள மாட்டேன்...நான் புறப்பட்டுப்போவது பற்றி இப்பொழுது நாம் பேசவேண்டாம்...நாளைக்கு அதைப்பற்றி மீண்டும் யோசிப்போம்...இப்போ நீ இன்னுமொரு பாட்டுப்பாடு.

மருதி: நீங்கள் நேற்று ஒரு பாட்டுப் புனைந்தீர்களே, அதையே பாடட்டுமா? கணவனைப் பிரிந்த தலைவியின் சோகமெல்லாம் அதிலே அற்புதமாகப் பொங்குகிறது.

அத்தி: அது வேண்டாம், மருதி. அந்தப் பாட்டு உனக்கு உகந்ததல்ல. இப்பொழுது புதிதாக நான் ஒரு பாட்டுப் பாடுகிறேன். அதற்கு அபிநயம் பிடிக்கிறாயா?

மருதி: என்ன பாட்டு?

அத்தி: வஞ்சிநாட்டு இளவரசன் உனது ஆடலைக் கண்டு மெச்சி தனது உயிரையே உனக்காகப் பரிசாகக் கொடுக்கப் போகிறான். இந்தக் கருத்தைக் கொண்ட பாட்டு.

மருதி: வஞ்சிநாட்டு இளவரசர் உயிர் எனக்கு எதுக்கு வேணும்?...இருந்தாலும் நீங்கள் அப்படிப் பாடுவதானால் நான் அதற்கு அபிநயம் பிடிக்கச் சம்மதந்தான்.

[மருதி பாட்டை எதிர்பார்த்து நிற்கிறாள். அத்தி பாடத் தொடங்குகிறான். இராகத்தின் ஆளத்தி தொடங்குகிறது.]

திரை

## காட்சி ஐந்து

[மறுநாட் காலை. மருதியின் இல்லத்திற்கு வெளியே பொன்னி நின்றுகொண்டிருக்கிறாள். மருதி மிகுந்த மகிழ்ச்சியோடும் உள்ளத் துடிப்போடும் வெளியே வந்து அவசரமாகக் காவிரியை நோக்கிப் புறப்படுகிறாள். பொன்னியை அவள் கவனிக்கவில்லை.]

பொன்னி: மருதீ, எங்கே காலை நேரத்திலே இத்தனை அவசரம்?

மருதி (சட்டென்று திரும்பிப் பொன்னியைப் பார்த்து): பொன்னி—நீயா......?

பொன்னி. ஆமாம் நான்தான், என்னை நினைப்பிருக்கிறதா? நேற்று மாலையிலிருந்து நானிருப்பதையே மறந்துவிட்டாயே?

மருதி: இல்லை பொன்னி. இன்றைக்கு எனக்கு முக்கியமான நாளல்லவா?

பொன்னி: அதென்ன திடீரென்று அப்படி முக்கியமான நாள்...? வஞ்சி நாட்டிற்குப் போவதற்கு இன்னும் உன் தந்தை வரவில்லையே?

மருதி: வஞ்சிநாடா? இனிமேல் அங்கே நான் எதற்குப் போகவேணும்? அவர்தான் இனிமேல் இங்கேயே இருந்துவிடுவதாக நினைத்துக் கொண்டிருக்கிறாரே?...

பொன்னி: அது யார் அவர்?

மருதி; அவர் யாராயிருந்தால் எனக்கென்ன பொன்னீ?—அவர் இருந்தால் போதும்...

பொன்னி: பிறகு ஆட்டனத்தியின் முன்னே ஆடிப் பரிசு வாங்க வேண்டுமென்ற ஆசையெல்லாம் காற்றிலே போய்விட்டதா? இதற்காகவா என்னை இங்கே இத்தனை நாட்களாகச் சிறை வைத்தாய்?

மருதி (சிரித்து); பொன்னீ, உனக்கொன்றுமே தெரிவதில்லை. ஆட்டனத்தியின் பரிசு கிடைத்தால்... தேன் சுவையாக இருந்தாலும் அமுதம் கிடைக்கிறபோது தேனை யார் நினைப்பார்கள்?

பொன்னி: ஆமாம். இப்போ எங்கே அவசரமாகப் புறப்பட்டாய்?

மருதி; அவர் தனியாகக் கொஞ்ச நேரம் சிந்தனை செய்ய வேணுமாம்...அப்புறம் என்னோடு எல்லாம் பேசப் போகிறார். அதுவரையிலும் எனக்கு இங்கே இருக்கை கொள்ளவில்லை. காவிரியும் கடலும் கூடுகின்ற இடத்திலே போய் அந்தக் கடல் அலைகளோடு கூத்தாட வேண்டும் போலிருக்கிறது. அப்பொழுதுதான் என் உள்ளத் துடிப்புக் கொஞ்சம் சாந்தமாகும்...நான் போய் வரட்டுமா?

[புறப்பட எத்தனிக்கின்றாள்.]

பொன்னி: நானும் கூட வரட்டுமா?

மருதி: நீ எதற்குப் பொன்னீ...வந்தால் ஏதாவது பேசிக்கொண்டே இருப்பாய்...என் உள்ளத்தோடு நான் சேர்ந்து துள்ளிக் குதிக்க முடியாது...நீ அவருக்குக் காலை உணவை ஆயத்தம் செய்கிறாயா?...

[பேசிக்கொண்டே வேகமாகப் போகிறாள். பொன்னி யோசனையோடும் புன்முறுவலோடும் அவளைப் பார்த்துக்கொண்டு நிற்கிறாள்.]

பொன்னி: காதல் கிடைத்துவிட்டால் பெண்களுக்கு வேறென்ன வேண்டும்?—அது கிடைக்காவிட்டால்தான் வாழ்க்கையே இருளாய் விடுகிறது.

[ஆழ்ந்த சிந்தனையோடு நிற்கிறாள்.]

இருந்தாலும் மருதிக்கு இத்தனை பயித்தியம் ஆகாது. அவரை யாரென்றே தெரிந்துகொள்ளவில்லையே? இப்பொழுதுகூட அவளுக்குத் தெரியாது.

[மறுபடியும் யோசனையில் ஆழ்கிறாள்.]

## காட்சி ஆறு

*[அதே காலை நேரம். காவிரி கடலிற் கலக்கும் இடம். ஆதிமந்தி தனியாக அங்கே வந்து நிற்கிறாள். அவளுடைய நீண்ட பிரயாணத்தின் இறுதிநிலை வந்துவிட்டது. கடலையும் காவிரியையும் பார்த்துப் பாடுகிறாள்.]*

*ஆதிமந்தி: (பாட்டு)*

பல்லவி

கடலலையே என் கணவரெங்கே?
காவிரியே என் கணவரெங்கே? (கடலலையே)

அனுபல்லவி

நடனமிடும் எழில்கண்டே நாயகரைக் கவர்ந்தீரோ
நைந்துருகும் ஏழையின்மேல் நல்லிரக்கம் கொள்ளீரோ
(கடலலையே)

சரணம்

பரிசாகக் கேட்டென்னைப் பாசமுடன் கைபிடித்தார்
பாடலிலும் ஆடலிலும் பாங்குடனே தான் வளர்த்தார்
ஒருநாளும் பிரியாதார் உண்மையுள்ள ஆட்டனத்தீ
ஓடிவந்தா லாகாதோ உள்ளம் வெந்தேன் ஆட்டனத்தீ
(கடலலையே)

*[சரணத்தைப் பாடும்போது மருதி அங்கு வந்து விடுகிறாள். அவள் கூர்ந்து பாடலைக் கேட்டு அப்படியே அசைவற்று நின்றிருக்கிறாள்.]*

*மருதி (பாட்டு முடிந்தவுடன் ஆதிமந்தியின் எதிரிலே வந்து நின்று):* அம்மணீ, உள்ளத்தை உருக்கும் படியாகப் பாடுகின்ற தாங்கள் யார்?

யதைக் கேட்டு நீங்கள் மனமிரங்கி வந்திருக்கிறீர்கள்—எனது கணவரைக்கொடுத்து விடுங்கள்-இல்லாவிட்டால்..

மருதி (சட்டென்று): வெள்ளத்திலே அடித்துக் கொண்டு போனவரை எப்படிக் கண்டுபிடிப்பது? நீங்கள் ஏதோ மனம் பேதலித்துப் பேசுகிறீர்கள்...

ஆதிமந்தி: அவர் இறந்துபோகவில்லை...ஆட்டனத்தி இறந்துபோகவில்லை—அது எனக்கு நன்றாகத் தெரியும்...அவர் உங்களிடத்திலேதான் இருக்கிறார்... அவர் என்னை என் தந்தை கரிகாலனிடம் பரிசாகப் பெற்றார்—நீங்கள் இன்று அவரை எனக்குப் பரிசாகக் கொடுத்துவிடுங்கள். ஆதிமந்தி உங்களை நாள்தோறும் பூசை செய்து தொழவில்லையா? அவளுக்கா நீங்கள் துன்பம் கொடுப்பீர்கள்? நான் உங்கள் மகளல்லவா?

[மருதிக்கு உண்மை விளங்குகிறது. தன் எதிரிலே சோகமே வடிவாக நிற்பவர் யாரென்றும் இல்லத்தில் இருப்பவர் ஆட்டனத்தியே என்றும் தெளிவாகின்றன. அவள் உள்ளம் தடுமாறுகிறது.]

மருதி: ஆதிமந்தியா நீங்கள்? அவர் ஆட்டனத்தியா?...இல்லை...இல்லை...இருக்காது...

ஆதிமந்தி: நான்தான் ஆதிமந்தி...ஆட்டனத்தியைத் தேடிக்கொண்டுதான் வந்திருக்கிறேன்...அவரில்லாமல் எனக்குக் கழார்ப் பட்டணத்திலே வேலையென்ன? காவிரித் தாயை வேண்டி என் கணவனைப் பெற்று வருவதாக என் தந்தை கரிகாலனுக்குச் சொல்லிவிட்டு வந்தேன்.

மருதி (மெதுவாகத் தயங்கித் தயங்கி): கணவர் கிடைக்காவிட்டால்...

[அவள் முகம் இருண்டு தோன்றுகிறது.]

ஆதிமந்தி: அவர் இந்தக் கடல்மேல்தானே போயிருப்பார்? அவர் கிடைக்காமல் போகமாட்டார்...நானும் கடல்மேலே சென்று அவர் இருக்குமிடத்திற்கே போய் அவரைக் கண்டு பிடிப்பேன்...கல்லிலும் முள்ளிலுமாக நடந்த என் கால்களுக்குக் கடல் நீர் எவ்வளவோ மெதுவாக இருக்கும்—ஆனால்...நான் உங்களையே நம்பியிருக்கிறேன். தாயே, உங்கள் முகத்தைப் பார்த்தால் தெய்வம் போலிருக்கிறதே...நீங்கள் துரோகம் செய்வீர்களா? செய்யவே மாட்டீர்கள்...

[மருதி துடிதுடிக்கிறாள். அவள் உள்ளத்திலே ஒரு பெரிய போராட்டம் நடைபெறுகிறது.]

மருதி: இது என்ன பேதலித்த மனம் பேசுகிற பேச்சா?...ஆமாம்—அவருக்கு மனம் பேதலித்திருக்கிறது. அவர் மனம் இனிச் சரியாகுமா? ஆதிமந்திக்கா... ஆட்டனத்தி...? எனது ஆட்டனத்தி...ஐயோ முடியாது முடியாது...(விம்முகிறாள்...தடுமாறுகிறாள்...) ஆட்டனத்தி...எனது உள்ளக் கோயிலிலே வந்து புகுந்து கொண்ட தெய்வம்...ஆட்டனத்தி...

ஆதிமந்தி: ஆட்டனத்தி—ஆமாம் அவரைத்தான் கேட்கிறேன்...எனது உயிர் அவர்தானே—அவரில்லாமல் நான் வாழ முடியுமா?

மருதி: ஐயோ அவரில்லாது நான் வாழ முடியுமா? (வெம்பித் துடிக்கிறாள்)...முடியாது...முடியாது... இது யார் இது? எனது உயிரைப் பறித்துப்போக வந்திருக்கிறது?...அது என் உயிரா?...

ஆதிமந்தி: தாயே, அவர் எனது காதல் தெய்வம்.. அவரைக் கொடுத்துவிடுங்கள்...நீங்களும் ஒரு பெண்ணல்லவா? நான் படுகிற துன்பமெல்லாம் தங்களுக்குத் தெரியாதா? அவரை மறுபடியும் பார்ப்பேனென்ற ஒரே

நம்பிக்கையாலே என் உள்ளம் இன்னும் வெடித்துப் போகாமலிருக்கிறது...

மருதி : ஐயோ, என்னைக் கொல்வதைப் போல நீங்கள் பேசுகிறீர்கள்...... என்னை நீங்கள் தெரிந்து கொள்ளவே இல்லை... நா... மருதி...நான் சாதாரண மான பெண்...இல்லை...இல்லை...ஆம் நான் சாதாரண மான—பெண்தான்—எனக்கு உங்கள் கணவனைத் தெரியாது—வேண்டுமானால் அந்தக் காவிரியையே கேளுங்கள்... நான்...வருகிறேன்...

[பெரு முயற்சியோடு இவ்வாறு கூறி அங்கிருந்து வீட்டை நோக்கி ஓடுகிறாள். ஓடியவள் சட்டென்று சற்றுத் தூரத்தில் தயங்கி நிற்கிறாள். ஆதிமந்தி மீண்டும் பாடிக்கொண்டு கடலை நோக்கிப் போவதைக் காண்கிறாள்.]

ஆதிமந்தி: (பாட்டு)

**கடலலையே என் கணவரெங்கே?**
**காவிரியே என் கணவரெங்கே?**

[பாடிக்கொண்டே கடலை நோக்கி விரைந்து செல்லுகிறாள். மருதி உள்ளம் தடுமாறுகிறது.]

மருதி : இந்த அரசகுமாரிக்கு நானா துரோகம் செய்வது? ஐயோ அவள் உள்ளம் எப்படியெல்லாம் துடிக்கிறதோ...அவள் கடலிலே விழுந்துவிட்டால்... (பயந்து நடுங்குகிறாள்) அவளைப் பலி கொடுத்துவிட்டு எனக்கு வாழ்வா?...இன்பமா...? என்னைப்போல அவளும் ஒரு பெண்தானே...? அவர் அவள் கணவன் தானே...? என்னவானாலும் அவளுக்குத் துரோகம் செய்ய மாட்டேன்...

[திரும்பி ஆதிமந்தியை நோக்கி வேகமாக ஓடுகிறாள். ஆதிமந்தி கடலை அணுகுவது தெரிகிறது.]

மருதி : ஆதிமந்தீ...ஆதிமந்தீ...இதோ உங்கள் கணவனை நான் கொடுக்கிறேன்...கடலிலே விழ வேண்டாம்.

[ஓடி ஆதிமந்தியைத் தடுக்கிறாள்.]

ஆதிமந்தி : தாயே, இப்பொழுதாவது மனமிளகினீர்களா?

மருதி : அம்மணி, என்னுடனே வாருங்கள். நான் உங்கள் கணவனை உங்களிடம் ஒப்படைக்கிறேன்.

ஆதிமந்தி : தாயே, நீ எனது குலதெய்வம்... உன்னை நான் என்றும் மறக்கமாட்டேன்...

மருதி (வெம்பிக்கொண்டு) : அந்தப் பாக்கியம் ஒன்றே போதும். எனக்கு...அதுவே போதும்...

[முன்னாலே வீட்டை நோக்கி நடக்கிறாள். தடுமாறிக்கொண்டு அவள் கரத்தைப் பிடித்து ஆதிமந்தி நடக்கிறாள்.]

திரை

## காட்சி ஏழு

[மருதியின் இல்லம். ஆட்டனத்தி ஒரு ஆசனத்தில் சாய்ந்தவண்ணமாக ஆழ்ந்த சிந்தனையிலிருக்கிறான். மருதி முன்னாலேயும் ஆதிமந்தி பின்னாலேயுமாக வருகிறார்கள். அந்த அறையின் கதவுக்குப் பக்கத்திலேயே நின்று மருதி ஆட்டனத்தியை ஆதிமந்திக்குக் காண்பிக்கிறாள். ஆதிமந்தி ஒரே வேகமாக அவனிடம் செல்லுகிறாள்.]

ஆதிமந்தி : ஆ. .யாரிது?...என் கணவரா?

அத்தி : ஆதி...

[இருவரும் தழுவிக்கொள்ளுகிறார்கள். ஆதிமந்தி அவன் மார்பின்மேல் சாய்கிறாள்.]

ஆதிமந்தி : காவிரித்தாய் எனக்கு மீண்டும் உங்களைத் தந்துவிட்டாள்...அவளுடைய கருணையால் எனக்கு என் உயிர் கிடைத்தது.

அத்தி : ஆதி, நீயேன் இப்படி வாடியிருக்கிறாய்?

ஆதிமந்தி ; நீங்கள் உயிரோடு இருக்கிறீர்களா? எப்படியோ உங்களை மீண்டும் உயிரோடு பார்க்க முடியுமென்ற ஒரே நம்பிக்கையில்தான் என் உயிர் இதுவரை நின்றிருந்தது.

அத்தி : நீ தனியாகவா வந்தாய்?

ஆதிமந்தி : என் மனம் ஒரு நிலையில் இருக்கவில்லை—நான் காவிரி ஓரமாகவே அன்று நீங்கள் வெள்ளத்தில் மறைந்ததிலிருந்து நடந்து வந்தேன்—என்னை யாரும் தடுக்காமல் விட்டுவிட்டார்கள். காவிரித்தாய் உங்களை எனக்குக் கொடுப்பாளென்று நம்பியே நான் வந்தேன்—அப்படியே அவள்தான் என்னை உங்களிடம் கூட்டிக்கொண்டு வந்தாள்.

அத்தி : ஆதி, உனது காதலின் பெருமையை இப்பொழுதுதான் உணர்கிறேன்.

[மருதி அந்த இடத்தைவிட்டு மறைந்துபோகிறாள்.]

ஆதிமந்தி : இந்த வீடு யாருடையது? இங்கே நீங்கள் எப்படி வந்தீர்கள்? காவிரித்தாய்க்கு உண்மையாகவே இப்படி ஒரு வீடுண்டா?

அத்தி : காவிரித்தாயா? காவிரியை நீங்கள் தெய்வமாகக் கொண்டாடுகிறீர்கள். ஆனால் அவளுக்கு வீடேது?

ஆதிமந்தி : அதுதான் நானும் இப்பொழுது நினைத்துப் பார்க்கிறேன். ஆனால் அவள்தான் என்னை இங்கே கூட்டிவந்தாள். அந்தத் தெய்வமே தான் என்னை உங்களிடம் அழைத்து வந்தது!

அத்தி (சந்தேகத்தோடு): யாரது உன்னை அழைத்து வந்தது? மருதியா? எங்கே மருதியைக் காணோம்! மருதீ!

[சுற்றுமுற்றும் பார்க்கிறான்.]

ஆதிமந்தி : யார்? அவளா மருதி? அவள் ஒரு தெய்வப் பெண்போல இருந்தாளே?

அத்தி (பதட்டத்தோடு): மருதீ...எங்கே போனாள்? பொன்னீ—பொன்னீ!

[பொன்னி விரைந்து வருகிறாள்.]

பொன்னீ, மருதி எங்கே?

பொன்னி : கடற்கரைக்குப் போவதாக என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்...

அத்தி (கவலையோடு): கடற்கரைக்கா...? ஆதி, நீ என் கூட வா...அவளைக் கண்டுபிடித்து வருவோம்.

[தள்ளாடி நடக்கிறான்......ஆதிமந்தி பின் தொடர்கிறாள்.]

திரை

## காட்சி எட்டு

[கடற்கரை, ஒரு படகு கண்ணுக்குத் தென்படுகிறது. மருதி அமைதியாக அங்கே வந்து நிற்கிறாள். சுற்றுமுற்றும் பார்க்கிறாள்.]

மருதி : எனது நாட்டியத்தைக் கண்டு ஆட்டனத்தியே மகிழ்ந்து பரவசமடைந்துவிட்டார். அது ஒன்றுதானே எனது வாழ்க்கையிலே நான் கொண்டிருந்த ஆசை...? அந்த ஆட்டனத்திக்கே பணிவிடை செய்து இன்பமடையும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது... கடைசியிலே எங்கள் இளவரசி ஆதிமந்திக்கு அவருடைய காதல் தெய்வத்தையே வழங்கிவிட்டேன். இனிமேல் எனக்கென்ன குறை? இனிமேல் இந்த வாழ்வுதான் எனக்கு எதற்கு? எனது லட்சியம் பூர்த்தியாகிவிட்டது......என்னைப் போலப் பாக்கியம் செய்தவர்கள் யாரிருக்க முடியும்?

[படகில் ஏறிக் கடலிலே செலுத்துகிறாள்.]

திரை

## காட்சி ஒன்பது

[அதே இடம். சற்று நேரம் பொறுத்து அத்தி தள்ளாடி நடந்து வருகிறான். மணலிலே தளர்ந்து விழுகிறான். ஆதிமந்தி அவனைத் தாங்கிப் பிடிக்கிறாள்.]

அத்தி : மருதி...எங்கே அவள்? ஆதிமந்தி; அவள் தான் எனக்கு உயிர் கொடுத்தவள்...

ஆதிமந்தி : எனக்கும் அவள்தான் உயிர் கொடுத்தாள்...அவளைக் காணோமே!

அத்தி : கடலின் பக்கம்தான் வந்தாளாம் ..

[அவன் முகம் ஐயத்தால் இருண்டு தோன்றுகிறது.]

ஆதிமந்தி : அதோ, கடலுக்குள்ளே பாருங்கள்... அடிவானத்திற்குப் பக்கத்திலேயே ஒரு படகுபோலத் தெரிகிறது.

அத்தி : ஆமாம்...அதே படகுதான்...மருதீ, என்ன வேலை செய்தாய்! மருதீ...மருதீ...

[பொன்னி வந்து சேருகிறாள். கடலுக்குள் குதிக்கச் சென்ற அத்தியைத் தடுத்து நிறுத்துகிறாள்.]

ஆதிமந்தி : உங்கள் உடம்பிலே பலமே இல்லையே; இப்பொழுது கடலில் நீந்த உங்களால் முடியுமா?

[வாய்விட்டு அலறுகிறாள்.]

பொன்னி : அந்தப் படகிலே யாரையும் காணோம்... இனிமேல் நீங்கள் போய்த்தான் என்ன பயன்? காரியம் மிஞ்சிப் போய்விட்டது...

அத்தி : மருதீ!...மருதீ...

ஆதிமந்தி : ஐயோ, எங்கள் இரண்டு பேருக்கும் உயிர்ப் பிச்சை கொடுத்த அந்தப் பெண்மணியின் உயிரைக் காப்பாற்ற முடியவில்லையே!...எங்களுக்கு உயிர் கொடுத்துவிட்டு நீ மறைந்து விட்டாயே!

[விம்மி யழுகிறாள்.]

அத்தி: (பாட்டு)

பல்லவி

பெண்ணணங்கே போய்வருவாய்—உன்
பேரன்பை யாரறிவார்? —(பெண்ணணங்கே)

ஆதிமந்தி: (பாட்டு)

அனுபல்லவி

பெண்ணணங்கே போய்வருவாய் - உன்
பேரன்பை நானறிவேன் —(பெண்ணணங்கே)

அத்தி: (பாட்டு)

சரணம்

அன்புடனே கால்வருடி ஆதரித்தாய் பெண்மணியே
என்றனுயிர் தான்கொடுத்த தெய்வமன்றோ நீ யெனக்கே?

ஆதிமந்தி: (பாட்டு)

இன்பமெலாம் எனக்களித்தாய்—நம்
இருவருள்ளம் ஒன்றலவோ?

இருவரும்: (பாட்டு)

பெண்ணணங்கே போய்வருவாய்—உன்
பேரன்பை மறவோமே

[இருவரும் கடலையே உற்றுப் பார்த்துக்கொண்டு நிற்கிறார்கள். பொன்னியின் விம்மும் குரல் லேசாக ஒரு புறத்திலிருந்து கேட்கிறது.]

திரை